# கல்கி

அடுத்த இதழில்

எஸ்.ரங்கநாயகி எழுதும்

**குடை ராட்டினம்**

புதிய தொடர்கதை ஆரம்பம்





இவள்தான் ஸாரா. பிறக்கும்போதே குறைந்த எடையோடு பிறந்த குழந்தை வேறொரு குழந்தை உணவு அருந்திக் கொண்டிருந்த இவள் இப்பொழுது அமுல்ஸ்ப்ரே சாப்பிட்டு வருகிறாள்.

# இப்பொழுது அவளைப்பாருங்கள்!

"அவள் எடை கூடி இருக்கிறது. அமுல்ஸ்ப்ரே தொடங்கியதிலிருந்து அவள் வளர்ச்சி அபாரம்" என்கிறார், 15 மாதக் குழந்தையான ஸாராவின் தந்தை திரு. ஸைரஸ் கஸ்தூர்.

Amulspray

உங்கள் குழந்தை முதலாண்டிலே வெகு வேகமாக வளருகிறது — இக்காலத்திற்குள், அது பிறந்தபோது இருந்த எடை மும்மடங்காக வேண்டும். எனவேதான் உங்கள் குழந்தையின் உடல் வளர உதவும் புரத சத்தை அதிகமாகக் கொண்டிருக்கிறது அமுல்ஸ்ப்ரே. குழந்தை உணவுகள் தயாரிக்க அமெரிக்காவில் உபயோகிக்கப் படும் உன்னதமான ஸ்ப்ரே-ட்ரையிங் செய் முறையில் ஆக்கம் பெற்றது அது. பாலிலுள்ள புரதத்தின் தரம் குறையாமல் இருப்பதற்காக, ஸ்ப்ரே—ட்ரையிங் செய்முறையில், குறைந்த வெப்பத்தில் பால் பதனமாக்கப் படுகிறது. அமுல்ஸ்ப்ரே ஒரு சீரான சரி விகித உணவு. அதில் விட்டமின்கள், கார்போஹைட்ரேட்டுகள், தாதுப் பொருள்கள்—ஏன், உங்கள் குழந்தை வேகமாகவும் ஆரோக்கியமாகவும் வளருவதற்குத் தேவையான அனைத்தையுமே கொண்டது அது.

ஆயிரக்கணக்கான தாய்மார்கள், தங்கள் குழந்தைகள் பிறந்த முதல் வாரத்திலிருந்தே அவற்றிற்குத் தாய்ப் பாலுக்குப் பதிலாகவோ அல்லது உபரி உணவாகவோ அமுல்ஸ்ப்ரே புகட்டி வருகிறார்கள். அதனால்தான், தயாரிக்கத் தொடங்கிய இரண்டு ஆண்டுகளுக்குள்ளாகவே அமுல்ஸ்ப்ரே இந்தியாவிலேயே உச்ச விற்பனையுள்ள குழந்தை உணவாகிவிட்டது.

## அமுல்ஸ்ப்ரே

தாய்ப்பாலுக்குப் பதிலாகப் புகட்டச் சிறந்தது!

சௌமிய, மார்கழி 27
1970, ஜனவரி 11

# கல்கி
## பொருளடக்கம்



"கல்கி"யில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்கள் எல்லாம் கற்பனைப் பெயர்களே; சம்பவங்களும் கற்பனையே.











நாடு பற்றி எரியும் போது சங்கீத சாதகம்



தமிழ்த்திருநாடு தன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா — பாரதியார்



மலர் 29 □ இதழ் 24

# உண்மை அறிவு புகட்டுவோம்

சுதந்திரக் கட்சியின் புதிய தேசிய நிர்வாக சபை அமைக்கப் பட்டிருக்கிறது. அடுத்த இரண்டாண்டுப் பணியை இந்த நிர்வாக சபை தொடங்குகிறது. அதற்கு மனப்பூர்வமான நல்லாசி வழங்குவது என் கடமை. சுதந்திரக் கட்சி பணக்காரக் கட்சி என்று பலர் மனத்தில் அபிப்பிராயம் இருக்கலாம். ஆனால் உண்மையில் சுதந்திரக் கட்சி, ஏழைக் கட்சி. இப்போதைய தேர்தல் நடைமுறைக்கு ஆகும் அளவில் செலவிட அதனால் இயலாது. தாமே சொந்தமாகச் செலவழிக்கக் கூடிய அபேட்சகர்கள் காங்கிரஸைப் பகைத்துக் கொண்டு சுதந்திரக் கட்சியின் சார்பில் தேர்தலுக்கு நிற்க விரும்புவதில்லை. தேர்தல் நடைமுறைகள் அடிப்படையில் மாறவேண்டும். கட்சிகளுக்கும், அபேட்சகர்களுக்கும் ஆகும் செலவில் பெரும் பகுதியைச் சர்க்காரே ஏற்பதற்கு முன்வரவேண்டும். அந்த நிலைமை ஏற்படும் வரை தேர்தல் வெற்றி மூலம் நேரடியாக அதிகாரத்தைக் கைப்பற்றுவது பற்றிச் சுதந்திரக் கட்சியினராகிய நாம் கவலைப்படலாகாது. நாம் அதிகாரத்தை நாடும் குழுவினர் அல்ல. மக்களுக்கு நல்லறிவு புகட்டும் பணியே நம்முடையது. இதைப்பற்றிப் பெருமைப்படவேண்டும். நமது பொருளாதார, ராஜீயக் கொள்கைகளைச் சுறுசுறுப்பாக வற்புறுத்தி வர வேண்டும். சுலபத்தில் ஏமாறக்கூடிய மக்களைக் கவருவதற்காகக் கீழ் நிலைக்கு நாம் போகக் கூடாது. மக்களுக்குப் பிரச்னைகளைப் பற்றிய விஷய ஞானத்தை அளிப்பதே நமது ஸ்வதர்மம். வோட்டுக்காகச் சமரசம் செய்து கொண்டு இப்பணியைக் கைவிடலாகாது. தனி அபேட்சகர்களின் யோக்கியதையையே கட்சியின் இறுதித் தகுதி பொறுத்து இருக்கிறது. நமது அங்கத்தினர்களில், அல்லது அபேட்சகர்களில் குடிகாரர்களாகவும், அற வழி செல்லாதவர்களாகவும் அரை டஜன் பேர் இருந்தால் கூடக் கட்சி அனைத்துக்குமே கெட்ட பெயர் வந்துவிடும்.

இப்போதுள்ள ஆளும் கட்சியினர் நம்மைப் பழிப்பதற்காக நாம் பயப்பட வேண்டியதில்லை. நம்மைப் பிற்போக்காளர் என்று கூறுபவர்கள் பொருளாதார உண்மைகளை அறிந்திருக்கவில்லை. அவர்களுக்குப் பிரத்தியட்ச உணர்வும் இல்லை. அவர்கள் வோட்டுக்காக வாக்குறுதிகளை அள்ளி வீசிக் கோஷங்களை எழுப்புகிறவர்கள். அவர்கள் அதிகாரப் பதவியிலிருந்த போதிலும் நாம் பயப்படலாகாது. காந்திய மார்க்கத்தைப் பின்பற்றும் நமது பொருளாதார, ராஜீய கொள்கைகளுக்கே மதிப்புக் கொடுத்துச் செயல்படுவோமாக. சத்தியம்தான் நமது திசைகாட்டி. அதிலிருந்து பிறழக் கூடாது என்ற பயமிருந்தால் போதும். சத்தியம், பொருளாதார விவேகம் ஆகியவை அழியாதவை. அவற்றை, அறியாமையிலும் அசத்தியத்திலும் திளைப்பவர்கள் ஏசுகிறார்களே என்பதற்காக நாம் புறக்கணிக்கலாகாது. அதிகார பீடங்களிலிருந்தும் அதிகாரத்தின் மூலம் நன்மை அடைபவர்களிடமிருந்தும் கிளம்பும் கோஷங்களைப் பற்றி அஞ்ச வேண்டாம். நமது ஸ்வதர்மப்படி மக்கள் மனத்திலிருந்து அறியாமையை விலக்குவோமாக.

தேசமனைத்துமே முனைந்து பாடுபட்டுப் பொருளுற்பத்தியைப் போதிய அளவுக்குப் பெருக்க வேண்டும். அந்த நிலைமை கைகூடும்வரை ஏழைகளின் வாழ்க்கை நிலையைச் சீர்படுத்திப் பிறருக்குச் சமமாக இருக்கச் செய்ய முடியாது. இப்போது பேசப்படும் சோஷலிஸத்துக்கும் உற்பத்திப் பெருக்கே அடிப்படைத் தேவை. ஆனால் இன்றைய சோஷலிஸப் பிரசாரம் துவேஷத்தையே மையமாகக் கொண்டுள்ளது. துவேஷத்தால் செல்வம் விளையாது; மாறாக உற்பத்தி முறைகள் பாதிக்கப்பெறும்.

சர்வாதிகார சோஷலிஸ முறையின் கீழ் தொழிலாளர் அடிமை நிலைக்குத் தாழ்ந்து விடுவர். இப்போதுள்ளதைப் போன்ற கூட்டு பேர உரிமைகள் முதலியவை பறிபோய் விடும். ருஷ்ய சர்வாதி

காரத்தின் கீழ் தொழிலாளரின் நிலைமை என்ன என்பதையும், ஹங்கேரி, செக்கோஸ்லவேகியா ஆகிய நாடுகளின் நிலைமை பற்றியும் நம் தொழிலாளர்களுக்கு எடுத்துச் சொல்லியாக வேண்டும். அரசுடைமை ஆதிக்கத்திலும், கம்யூனிஸ வாழ்க்கை வழியிலும் தமது நிலைமை என்னவாக இருக்கும் என்பதை அவர்கள் தெளிந்தறியச் செய்ய வேண்டும்.

சுதந்திரக் கட்சி அமைக்கப்பட்டது பற்றி ராஜேந்திர பிரசாத் பின்வருமாறு எழுதினார்: ''ஜனநாயக அமைப்பில் ஆளும் கட்சியைப் போலவே கட்டுக்கோப்புள்ள எதிர்க்கட்சியும் அவசியம் என்பதை அவர் (ராஜாஜி) சமீப காலத்தில் உணர்ந்து, சுதந்திரக் கட்சியைத் தோற்றுவித்திருக்கிறார். அதற்குத் தனி வேலைத் திட்டம் உண்டு. அது காங்கிரஸ் திட்டத்தினின்று மாறுபட்டது. மக்களின் ஆதரவு கிடைத்தால் அது இப்போதுள்ள திட்டத்துக்கு மாற்றுத் திட்டமாகவும் உருப்பெறக்கூடும். கம்யூனிஸ்டுக் கட்சி நீங்கலாக வேறு எந்தக் கட்சிக்கும், காங்கிரஸ் திட்டத்தினின்று மாறுபட்டதாக இவ்வளவு தெளிவாக வரையறுக்கப் பெற்ற வேலைத் திட்டம் கிடையாது.''

தவறான பொருளாதாரம், இன, மத, வர்க்க துவேஷங்கள் ஆகியவற்றிலிருந்து மக்களின் மனத்தைத் திசை திருப்பி விடுவது நமது பணி. காங்கிரஸில் ஏற்பட்ட சீரழிவின் காரணமாக இப்பணி முன்னைவிடச் சுலபமாகிவிட்டது. பொது நலனைப் பற்றிய தமது கருத்துக்களைச் செயல்படுத்துவதற்குக் காங்கிரஸ் இருபது வருஷத்துக்கு மேல் வாய்ப்புப் பெற்றிருந்தும் அம்முயற்சியில் படுதோல்வி கண்டுள்ளது. இதுவே நாம் சரியான கொள்கைகளை உருவாக்குவதற்குத் துணை புரியக்கூடும். சுதந்திரக்கட்சி எதற்காகப் பாடுபடுகிறது என்பதைப் பற்றிய உண்மையை முழு சக்தியுடன் புலப்படுத்துவதற்கு இந்த வாய்ப்பினைப் பயன்படுத்திக்கொள்ள வேண்டும்.

பார்லிமெண்டிலும், மாநில சட்டசபைகளிலும் நியாயமாக நமக்கு உரித்தானதை விடக் குறைவாக ஸ்தானங்கள் கிடைத்தால் நாம் தோற்று விட்டதாக நினைக்கலாகாது. எண்ணிக்கை எவ்வாறு இருந்த போதிலும், நமது செல்வாக்கு நிச்சயமாகக் குறையவில்லை. தேர்தல் நடைமுறை மாறி, நிதித் தொந்தரவுகள் நீங்கும் காலம் வெகு தொலைவில் இல்லை. அப்பொழுது ஜனநாயகத்தில் தனக்குரிய வலிமையுடன் உண்மைவெல்லும். நமது குழந்தைகள் சீரும் சிறப்புமாக வாழ்வதற்கு வழிசெய்யும் பயனுள்ள கொள்கைகளுக்கு அப்போது ஏற்றம் வரும்.

அரசுடைமை ஆதிக்கம் என்ற மோக வலையில் விழாத பிற கட்சிகள் நம்முடன் சேர்ந்தால், காங்கிரஸின் சர்வாதிகாரத்தால் இந்தியா ருஷ்யச் சார்புள்ள நாடாகின்ற நிலைமை ஏற்படாமல் காப்பாற்றலாம். இப்போது மற்ற கட்சிகளும் அந்த மாய வலையில் சிக்கிக் கொண்டுதான் இருக்கின்றன. பயனற்ற தீவிர வாதம் பேசி, போதிய உற்பத்தி இல்லாமலே மக்கள் நலனை உறுதி செய்வதாக வாக்களிக்கின்றன. எதைச் செய்தாவது வோட்டுப் பெற்று அதிகாரத்துக்கு வர வேண்டும் என்ற ஆசையால் கொள்கைகளை மனம் போனவாறு அறிவிக்கும் போக்கு அவற்றிடம் காணப்படுகிறது. நாம் பொறுத்திருப்போம். காலப் போக்கில் இந்த மற்றக் கட்சிகள் உண்மையைக் கண்டறிந்து சுதந்திரக் கட்சியுடன் ஒத்துழைத்துத்தான் ஆக வேண்டும். ஒத்துழைப்பதன் விவேகத்தைப் பிறர் உணரும்போது அவர்களுடன் ஒத்துழைக்க நாம் தயாராக இருப்போம். அந்தக் காலம் வரும்வரை பகட்டாக வாய்ப் பந்தல் போடாமல், உண்மைக்கும் விவேகத்துக்கும் மதிப்புக் கொடுத்துத் தனியாகவே உழைத்து வருவதில் திருப்தி அடைவோமாக.

**(''ஸ்வராஜ்யா''வில் ராஜாஜி எழுதியது.)**

# ராஜாஜியின் கருத்துக்கள்

இரட்டைக் காளைச் சின்னத்துக்காகக் காங்கிரஸின் இரு பிரிவுகளும் உரிமை கொண்டாடுகின்றன. எந்தப் பிரிவுக்குப் பெரும்பான்மை பலம் இருக்கிறது என்பதைக் கொண்டு இதற்கு முடிவுகட்டுவது நியாயமல்ல என்று எனக்குத் தோன்றுகிறது. முன்பு இங்கிலாந்தில் கிறிஸ்துவ தேவாலய நிறுவனங்கள் சிலவற்றிடையே பெயருக்காக இப்படிப்பட்ட போட்டி உரிமைகள் கொண்டாடப்பட்டன. அப்போது, ஆதியிலிருந்து சம்பிரதாயச் சடங்குகளில் வழுவாதிருந்த ஒரு பிரிவுக்கே, அது மிகவும் சிறுபான்மையாக இருந்த போதிலும், இந்த உரிமையைப் பிரபுக்கள் சபை அளித்ததை நினைவுகூர்கிறேன். (அறுபதாண்டுக்கு முற்பட்ட விஷயமாதலால் இதன் விவரங்கள் நினைவிலில்லை.)

காங்கிரஸின் தேர்தல் சின்னம் குறித்துச் சீட்டுக் குலுக்கிப் போட்டெடுத்து அதன் முடிவுப்படி ஒரு பிரிவினர் இரட்டைக் காளைகளையும், மற்றவர் ராட்டையையும் சின்னமாகக் கொள்ளலாம் எனக் கருதுகிறேன். இரட்டைக் காளைச் சின்னம் நீண்ட காலமாக வழக்கில் இருந்திருப்பதால் ஒரு சிறப்புப் பெற்றிருக்கிறது. ராட்டையும் காந்திய மரபுக்குரியதாகையால் வேறு ஒருவிதத்தில் சிறப்புப் பெற்றிருக்கிறது. காங்கிரஸ் ஆட்சி மக்களிடம் மவுசு இழந்து விட்டதாகவே என் அபிப்பிராயம். எனவே, இரட்டைக் காளைக்கு விசேஷக் கவர்ச்சி இருப்பதாகச் சொல்வதற்கில்லை. அப்படியே காங்கிரஸின் மவுசு குறையவில்லை என்று வைத்துக் கொண்டாலும், அது காரணமாக இரட்டைக் காளைக்குப் பிரத்தியேகமான கவர்ச்சி இருப்பதாக வைத்துக் கொண்டாலும், காந்திஜியின் பெயரைச் சொல்லிச் சொல்லிப் பிரசாரம் செய்கிறவர்களுக்கு ராட்டையும் நல்ல சின்னம்தான்.

சின்னம் குறித்த இவ்விஷயத்தை அடுத்த பொதுத் தேர்தல் வரை தள்ளிப் போடுவதற்



# பொங்கல் பிரார்த்தனை

**ஸ்ரீ காஞ்சி காமகோடி பீடாதிபதி ஜகத்குரு ஸ்ரீ சங்கராசார்ய ஸ்வாமிகள் ஸ்ரீமடத்திலிருந்து வெளியாகியுள்ள அறிக்கை:**

வருகிற பொங்கல் பண்டிகையன்று ஒவ்வொரு சிற்றூரிலும், நகரத்திலும் ஆத்திகப் பெருமக்கள் ஒன்று சேர்ந்து ஊரிலுள்ள சிறுவர், சிறுமியர் எல்லோரும் மாணிக்கவாசகர் அருளிய சிவ புராணத்தையாவது, நாம ராமாயணத்தையாவது பாராயணம் செய்யும்படி முயற்சி எடுக்க வேண்டும்.

அன்று புதுப் பொங்கல் வைத்து வழிபட்டவுடன், சூரிய பகவானுக்கு எதிரே நின்று ஆண்டவனை மனத்தில் தியானித்துக் கீழ்வரும் மூன்று பிரார்த்தனைகளைச் செய்து கொள்ள வேண்டும்:

**நமது பாரத நாட்டை ஆளும் பொறுப்புடையவர்கள் வேற்றுமைகளும் குழப்பங்களும் இல்லாமல் ஒற்றுமையுடனும், கடவுள் பக்தியுடனும் நல்வழியில் நாட்டை நடத்தி வரும்படியாக அருள் பாலிக்க வேண்டும்.**

**நாட்டில் நாஸ்திக வாதங்கள் குறைந்து, மக்கள் எல்லோருமே ஆண்டவன் திருவடிகளில் அன்பு கொண்டு ஒழுகுமாறு திருவருள் பாலிக்க வேண்டும்.**

**திருக்கோயில்கள் எந்த எந்த ஆகமமுறைப்படி பிரதிஷ்டை செய்விக்கப்பட்டிருக்கின்றனவோ, அந்த அந்த ஆகம முறைகளைப் பின்பற்றியே அங்கு ஆண்டவனுடைய வழிபாடுகள் வளரும்படி அருள்பாலிக்க வேண்டும்.**

ஒவ்வொரு பிரார்த்தனையையும் விண்ணப்பித்தவுடன் தண்டமிட்டு நமஸ்கரிக்க வேண்டும். சிவபுராண புத்தகமும், நாம ராமாயண புத்தகமும் வேண்டுவோர் 15 காசு தபால் தலையுடன் கீழ்க்கண்ட முகவரிக்கு எழுதும்படி கோரப்படுகிறார்கள்:

முகவரி : **ஸ்ரீ சங்கராசார்ய ஸ்வாமிகள் மடம், சாலைத் தெரு, காஞ்சிபுரம் - 2**

இல்லை. ஏனெனில், இடைத் தேர்தல்களிலும் கூடச் சின்னம் அவசியமாகும்.

★

சர்க்கார் தொழிலாதிக்கம் என்ற அறியாமைச் சித்தாந்தமும், கம்யூனிஸ்ட்களின் நெரிசலும் ஸ்ரீமதி இந்திராகாந்தியின் அரசாங்கத்தை ஆட்படுத்துமாகில், கோடிக்கணக்கான ரூபாய்களைத் திறமையுடன் நிர்வகிக்கும் பெரிய தொழிலகங்கள் யாவும் சர்க்காரால் ஆர்ஜிதம் செய்யப்படும். இப்போதுள்ள அரசாங்கத் துறைத் தொழிலகங்களைப் போல் இவற்றிலும் ஆண்டுதோறும் ஏராளமான நஷ்டம் ஏற்படும். இது தேசத்துக்கே விபரீதமாகும். சர்க்கார் சர்வாதிகாரக் கொள்கையை ஆட்சேபிக்கும் எதிர்க்கட்சிகள் யாவும் தமது தனி உருவத்தை முக்கியமாகக் கருதும் போக்கை மறந்து, தேச நலனுக்காக ஒன்றுபட்டால் இந்த விபரீதத்தைத் தவிர்த்து நாட்டில் சுபிட்சம் காண முடியும்.

★

காங்கிரஸ் கொடி விஷயமாக என் நீண்ட காலப் புகார் நீடிக்கிறது. தேசியக் கொடியிலுள்ள மூவர்ணங்களுக்கும் காங்கிரஸ் கொடியிலுள்ள மூன்று வர்ணங்களுக்கும் இடையே எவ்வித மாறுபாடும் இல்லாததால் ஏற்படும் குழப்பத்தை நீக்குவதே நியாயம். தேசியக் கொடியின் மையத்தில் தர்ம சக்கரம் இருப்பதும், காங்கிரஸ் கொடியின் மத்தியில் ராட்டை இருப்பதும் ஒரு பெரிய வித்தியாசமாகாது. தேசியக் கொடியை மாற்றுவதற்கில்லை. காங்கிரஸ் இரண்டாகப் பிரிந்து, இருவரும் வெவ்வேறு கொடி வைத்துக் கொள்ள நேரிட்டிருப்பதால் இப்போது பழைய மூவண்ணத்தை இரு பிரிவுகளுமே கைவிட்டுப் புதிய கொடிகளை அமைத்துக் கொள்ள வாய்ப்பு ஏற்பட்டிருக்கிறது. இரு பிரிவுகளும் ஒரே ஒரு வர்ணமுள்ள கொடிகளை வைத்துக் கொள்ளலாம். அதில் தத்தம் சின்னங்களைப் பொறித்துக் கொள்ளலாம்.

அரசாங்கங்களுக்கு மட்டுமே கொடி இருக்க வேண்டும்; அரசியல் கட்சிகளுக்குக் கொடியே வேண்டியதில்லை என்பதுதான் என் தனிப்பட்ட அபிப்பிராயம்.

★

இந்தியாவிலேயே டிராக்டர்கள் செய்யப்படும் போது, மத்திய சர்க்காரோ ராஜ்ய சர்க்கார்களோ ருஷியாவிலிருந்து டிராக்டர் வாங்குவதற்கு எவ்வித நியாயமும் தெரியவில்லை. பின்னணியாக ஏதேனும் அரசியல் செல்வாக்கு இருந்தாலொழிய இப்படிச் செய்ய வேண்டியதில்லை. பார்லிமெண்டில் இவ்விஷயம் நன்கு அலசி விவாதிக்கப்பட்டு,

முழுத் தகவலும் வெளிப்படுத்தப்பெறும் என நம்புகிறோம்.

★

ஜனவரி முதல் தேதி அமுலுக்கு வந்த கேரள நிலச் சீர்திருத்தச் சட்டத்தை நடைமுறைக்குக் கொண்டு வருவதாகச் சாக்குக் காட்டி, கேரள ராஜ்யத்திலுள்ள பல இடங்களில் மார்க்ஸிஸ்டுகள் தனியார் நிலங்களையும் சர்க்கார் நிலங்களையும் வசப்படுத்திக் கொண்டிருக்கிறார்கள். இவ்விதமாகச் சொத்தைத் தம் வசப்படுத்திக் கொள்வது சமூகத்தை எதிர்த்துச் செய்யும் போராகும். இது மத்திய உள்துறை இலாகாவுக்கு விடுக்கப்பட்டுள்ள சவால். ஒழுங்குமுறைகள் குலைந்துவிட்ட குழப்ப ஆட்சிக்கு இது தொடக்கம்.

★

முன்னாள் மன்னர்களின் ராஜ மானிய விஷயத்தை ஸுப்ரீம் கோர்ட்டின் ஆலோசனைக்கு ராஷ்டிரபதி விட வேண்டிய தருணம் ஏற்பட்டிருக்கிறது. முன்னாள் மன்னர்களோடு சர்க்கார் பேச்சு வார்த்தை நடத்துவதன் மூலம் ராஜமானியத்தை விடுமாறு அவர்களைச் செய்ய முடியும் என்று எதிர்பார்ப்பதற்கே இல்லை. எனவே, ஸுப்ரீம் கோர்ட்டை யோசனை கேட்பதுதான் மிகவும் சிலாக்கியம். இவ்வாறு செய்தால் வழக்கறிஞர்களைக் கொண்டு முன்னாள் மன்னர்கள் தமது கட்சியை எடுத்துச் சொல்ல ஸுப்ரீம் கோர்ட் வாய்ப்புத் தரும்.

★

சுதந்திரக்கட்சியின் தேசிய சபை சென்னையில் கூடி அடுத்த இரண்டாண்டுகளுக்கான நிர்வாகிகளைத் தேர்ந்தெடுத்துள்ளது. ஸ்ரீ எம். ஆர். மஸானி அவர்கள் சுதந்திரக்கட்சியின் தலைவராக ஏகமனதாகத் தேர்ந்தெடுக்கப்பட்டிருக்கிறார். பத்தாண்டுகள் இப்பதவியை வகித்துக் கடுமையாக உழைத்த ஆசாரிய ரங்கா அவர்கள் தாமாகவே விலக முடிவு செய்து விட்டார். எனினும் அவர் சுதந்திரக் கட்சியின் பார்லிமெண்டரிக் குழுவின் தலைவராகத் தொடர்ந்து இருந்து வருவார்.

★

''உழைத்துச் சம்பாதியுங்கள்'' என்ற புதிய பிரசார கோஷத்தைப் பிரதமர் எழுப்பியிருப்பதாகப் பத்திரிகைகளில் படிக்கும் போது மகிழ்ச்சி உண்டாகிறது. வெறும் அதிருஷ்டத்தின் மீது பெரிய பரிசு பெறுவதற்காகச் செய்யப்படும் லாட்டரி விளம்பரங்களிலிருந்து இது எவ்வளவு மாறுபட்டிருக்கிறது! 'எவ்விதத்திலும் உழைக்காமலே பெரும் செல்வத்தை ஈட்டுவீர்' என்பதே லாட்டரி நடத்தும் ராஜ்யங்களின் பிரசார கோஷமாயிருக்கிறது.

# அன்பின் உருவம்

''எல்லை காந்தி'' என்று பாரத மக்களால் அன்புடன் அழைக்கப்படும் கான் அப்துல் கபார்கான், தமிழகச் சுற்றுப் பிரயாணத்தின் முதல் கட்டமாக சென்ற டிசம்பர் 30ந் தேதி சென்னைக்கு வந்தார்.

பிராயம் முதிர்ந்த அவர், சுற்றுப் பிரயாணம் மேற்கொண்டதே, பாரத நாட்டு மக்கள் மறந்து வரும் காந்திய அறநெறியை நினைவுபடுத்தத்தான். அவரையும் அவரது எளிய தோற்றத்தையும் கண்ட மாத்திரத்தில் ''உயர்ந்த சிந்தனை; எளிய வாழ்வு'' என்று காந்தி மகான் போதித்து வந்த வார்த்தைகளே மனித உருக்கொண்டு நம்மிடையே நடமாடுகிறதோ என்றுதான் தமிழக மக்கள் கருதி மெய்சிலிர்த்தனர்.

சென்னைக்கு வந்ததும் கபார்கான் அன்று மாலையே ராஜாஜி அவர்கள் இல்லத்துக்கு விஜயம் செய்து தமது வணக்கங்களைத் தெரிவித்து அளவளாவிக் கொண்டிருந்தார். பின்னர் அவர் புறப்பட்ட போது ராஜாஜி, அவரை அவர் ஏற இருந்த 'கார்' வரை வந்து வழியனுப்ப முற்பட்டார். அப்போது, ''நீங்கள் வரக் கூடாது! நீங்கள் அவ்வளவு தூரம் வரக் கூடாது!'' என்று கெஞ்சாத குறையாக ராஜாஜியைத் தடுத்து நிறுத்திய காட்சியைக் கண்டவர்களுக்கு அவர் உள்ளத்தில் ராஜாஜி எத்தகைய மதிப்பு பெற்று விளங்கினார் என்பது புலனாயிற்று.

பின்னர் கல்கி ஆசிரியர் ஸ்ரீ சதாசிவம் அவர்களின் அன்பான வேண்டுகோளுக்கு இணங்கி கல்கி காரியாலயத்துக்கு விஜயம் செய்தார். ஸ்ரீமதி எம். எஸ்., குருநானக் இயற்றிய ஒரு கீதத்தைப் பாடிய போது, அவர் தமது கையில் வைத்திருந்த தேநீர்க் கோப்பையைக்கூட மறந்து, தேநீர் அருந்தாமல் பாடல் முடியும் வரை பக்தியோடு மெய்ம்மறந்து கேட்டுக் கொண்டிருந்தார். அவரது உயர்ந்த பண்பினையும், ''நான் கடவுளின் சேவகன்'' என்று தம்மை அவர் கூறிக் கொள்வது எவ்வளவு உண்மை என்பதையும் இந்நிகழ்ச்சி உணர்த்தியது.

காரியாலயத்தை விட்டுப் புறப்பட்ட போது, காரியாலய ஊழியர்கள் அவருக்கு வணக்கம் செலுத்தினர். ஆசிரியர் சதாசிவம் அவர்கள், ''நீங்கள் இவர்களுக்கு உங்கள் ஆசியை நல்கி இரண்டு வார்த்தை பேச வேண்டும்'' என்று வற்புறுத்தியபோது, ஊழியர்களைப் பார்த்து, ''நான் உங்களுக்காகத் தானே வந்திருக்கிறேன்....'' என்றார். அவரது கனிந்த நெஞ்சத்தினின்று உதிர்ந்த அந்த வார்த்தைகள் கூடியிருந்த ஊழியர்களின் உள்ளங்களை உருக்கி விட்டன.

இதற்குப் பிறகு கபார்கான் அவர்கள் சென்னை நகரசபை வரவேற்பில் பங்குகொண்டார். தமிழகத்தின் சார்பில் ஒரு லட்ச ரூபாய் நிதி திரட்டி அவருக்கு வழங்கப்பட்டது.

ஜனநாயக நாட்டில் நல்ல சர்க்கார் அமைவதும் அமையாததும் ஏழை மக்களின் கையில்தான் இருக்கிறது; வகுப்புத்துவேஷங்களை யெல்லாம் மனத்திலிருந்து அகற்றி, மக்கள் நல்வாழ்வு நடத்தி திறமை மிக்க அரசாங்கத்தையும் உருவாக்க வேண்டும் என்ற அவரது அறிவுரையை மறவாமலிருப்போமாக.









1. கான் அப்துல் கஃபார்கான் அவர்களைச் சென்னை மீனம்பாக்கம் விமான நிலையத்துக்கு, கவர்னர் ஸர்தார் உஜ்ஜல் சிங், தமிழக முதலமைச்சர் திரு மு. கருணாநிதி முதலியோர் சென்று வரவேற்றார்கள். 2. மாதர் கூட்டத்துக்கு கஃபார்கானை அமைச்சர் ஸ்ரீமதி சத்தியவாணிமுத்து அவர்களும் சர்தாரிணி உஜ்ஜல் சிங் அவர்களும் அழைத்துச் சென்றார்கள்.

3. காந்திஜியின் தோழர்கள் ராஜாஜியும் கஃபார்கானும். 4. சென்னை மேயர் வரவேற்பிதழ்ப் பேழையை அளிக்கிறார். 5. கல்வி காரியாலய தோட்டத்தில் வரவேற்றபோது ஸ்ரீமதி எம். எஸ். சுப்புலக்ஷ்மி திராட்சைப் பழங்களை வழங்கி உபசரிக்கிறார். 6. ஸ்ரீமதி அம்புஜம்மாள் தமது வணக்கங்களைத் தெரிவித்துக் கொள்கிறார். ★





# பொன்னியின் செல்வன்

அமரர் கல்கி

## பதினெரும் அத்தியாயம்

# மதுராந்தகத் தேவர்

இந்தக் கதையில் ஒரு முக்கிய பாத்திரமாகிய மதுராந்தகத்தேவரைக் கதை ஆரம்பத்தில் கடம்பூர் மாளிகையிலேயே நாம் சந்தித்தோம். இன்னொரு முறை பழுவேட்டரையரின் பாதாள நிலவறைப் பாதை வழியாக நள்ளிரவில் அவர் அரண்மனைக்குச் சென்ற போது பார்த்தோம். அப்பொழுதெல்லாம் அந்தப் பிரசித்திபெற்ற இளவரசரை,- பின்னல் பரகேசரி உத்தம சோழர் என்னும் பட்டப் பெயருடன் தஞ்சைச் சிம்மாசனத்தில் வீற்றிருக்கப் போகிறவரை, — நல்ல முறையில் வாசகர்களுக்கு அறிமுகம் செய்து வைக்கவில்லை. அந்தக் குறையை இப்போது நிவர்த்தி செய்து வைக்க விரும்புகிறோம்.

மதுராந்தகரைப் பற்றிச் சொல்வதற்கு முன்னல் அவருடைய பரம்பரையைக் குறித்தும் வாசகர்களுக்குச் சிறிது ஞாபகப்படுத்த வேண்டும்.

சுந்தர சோழ சக்கரவர்த்திக்கு முன்னல் சோழ நாட்டில் நீண்ட காலம் அரசு செலுத்தியவர் அவருடைய பெரிய தந்தை கண்டராதித்த சோழர். அவரும் அவருடைய தர்ம பத்தினியுமான மழவரையர் மகள் செம்பியன் மாதேவியும் சிவபக்த சிகாமணிகள். சிவாலயத் திருப்பணிகளிலேயே தங்கள் வாழ்க்கையை அவர்கள் முழுதும் ஈடுபடுத்தியவர்கள்.

தமிழ் நாடெங்கும் சிதறிக் கிடந்த தேவாரத் திருப்பதிகங்களைத் தொகுத்துச் சேர்க்கக் கண்டராதித்தர் ஆசை கொண்டிருந்தார். அந்த ஆசை அவர் ஆயுள் காலத்தில் நிறைவேறவில்லை. ஆயினும் சில பாடல்களைச் சேகரித்தார். தேவாரப் பதிகங்களின் முறையில் தாமும் சில பாடல்களைப் பாடினர். அவற்றில் சிதம்பரத்தைப் பற்றி அவர் பாடிய பதிகம் திருவிசைப்பா என்ற தொகுதியில் இன்னும் வழங்கி வருகிறது.

கண்டராதித்தர் தமது அரும் பெரும் தந்தையாகிய பராந்தக சக்கரவர்த்தி தில்லையம்பலத்துக்குப் பொன் வேய்ந்தது பற்றித் தாம் பாடிய பதிகத்தில் குறிப்பிட்டிருக்கிறர் :

**"வெங்கோல் வேந்தன் தென்னன்**
**நாடும் ஈழமும் கொண்ட திறல்**
**செங்கோற் சோழன் கோழிவேந்தன்**
**செம்பியன் பொன்னணிந்த**
**அங்கோல் வளையார் பாடியாடும்**
**மணி தில்லையம்பலத்துள்**
**எங்கோன் ஈசன் எம்மிறையை**
**என்றுகொல் எய்துவதே"**

என்ற பாடலில் தம் தந்தை பாண்டிய நாடும் ஈழமும் வென்றவர் என்பதைக் குறிப்பிட்டிருக்கிறர். பதிகத்தின் கடைசிப் பாடலில் தமது பெயரை அவர் குறித்திருப்பதுடன், தம்முடைய காலத்தில் சோழரின் தலைநகரம் தஞ்சையானதையும் குறிப்பிட்டிருக்கிறர்.

**"சீரான்மல்கு தில்லைச்**
**செம்பொ னம்பலத்தாடி தன்னைக்**
**காரார் சோலைக் கோழிவேந்தன்**
**தஞ்சையர்கோன் கலந்த**
**ஆராவின் சொல் கண்டராதித்தன்**
**அருந் தமிழ் மாலைவல்லார்**
**பேராவுலகிற் பெருமையோடும்**
**பேரின்பம் எய்துவரே !"**

கண்டராதித்தருக்குப் போர் செய்து இராஜ்யத்தை விஸ்தரிப்பதில் நம்பிக்கை இருக்கவில்லை. போர்களினல் மனிதர்கள் அடையும் துன்பங்களைக் கண்டு வருந்தியவரானபடியால் கூடிய வரையில் சண்டைகளை விலக்க முயன்றர்;



சமாதானத்தையே நாடினர். இதன் காரணமாக இவர் ஆட்சிக் காலத்தில் சோழ சாம்ராஜ்யம் மிகச் சுருங்கலாயிற்று.

கண்டராதித்தர் தம் முதிர்ந்த வயதில் மழவரையர் மகளை மணந்து கொண்டார். அவர்களுடைய புதல்வன் மதுராந்தகன், கண்டராதித்தரின் அந்திய காலத்தில் சின்னஞ்சிறு குழந்தை. இராஜ்யத்தைச் சுற்றிலும் எதிரிகள் தலையெடுத்துக் கொண்டிருந்தனர். அதே சமயத்தில் கண்டராதித்தரின் தம்பி அரிஞ்சயன் போரில் காயம் பட்டு மரணத்தை எதிர்நோக்கிக் கொண்டிருந்தான். அரிஞ்சயனுடைய குமாரன் சுந்தர சோழன் அதற்குள் காளைப் பருவத்தைக் கடந்து, பல போர்களிலே வெற்றி முரசு கொட்டி, மகா வீரன் என்று பெயர் பெற்றிருந்தான். ஆதலின் கண்டராதித்தர் தமக்குப் பின்னர் சுந்தர சோழனே பட்டத்துக்குரியவன் என்று முடிவு கட்டிக் குடி மக்களுக்கும் அறிவித்து விட்டார். பின்னால் சிம்மாதனம் சம்பந்தமான குடும்பச் சண்டைகள் உண்டாகாதிருக்கும் பொருட்டுச் சுந்தரசோழருடைய சந்ததிகளையே பட்டத்துக்கு உரியவர்கள் என்றும் சொல்லி விட்டார்.

தமது குமாரன் மதுராந்தகனைச் சிவபக்தனாக வளர்த்துச் சிவ கைங்கரியத்தில் ஈடுபடுத்த வேண்டும் என்று தம் மனைவியிடமும் அவர் சொல்லியிருந்தார். இவையெல்லாம் அந்நாளில் நாடறிந்த விஷயங்களாயிருந்தன.

செம்பியன்மாதேவி தன் கணவருக்கு அளித்த வாக்கை நிறைவேற்றி வந்தாள். மதுராந்தகனுடைய சிறு பிராயத்திலேயே அவன் உள்ளத்தில் சிவபக்தியையும் உலக வாழ்வில் வைராக்கியத்தையும் உண்டாக்கி வளர்த்து வந்தாள்.

ஏறக்குறைய இருபது பிராயம் வரையில் மதுராந்தகன் அன்னையின் வாக்கையே வேத வாக்காகக் கொண்டு நடந்து வந்தான். இராஜ்ய விவகாரங்களில் அவனுக்குச் சிறிதும் பற்று ஏற்படவில்லை. சோழ சிங்காதனம் தனக்கு உரியது என்ற எண்ணமே அவன் உள்ளத்தில் உதயமாகாமல் இருந்தது.

இரண்டு வருஷங்களுக்கு முன்னால் சின்னப் பழுவேட்டரையரின் மகளை மணந்ததிலிருந்து அவன் மனம் மாறத் தொடங்கியது. ஆரம்பத்தில் இலேசாகத் தலைகாட்டிய ஆசைக்குப் பழுவூர் இளையராணி நந்தினி தூபம் போட்டுப் பெரிதாக்கி வந்தாள். சிறிய தீப்பொறி அதிவிரைவில் பெரிய காட்டுத் தீ ஆகி விட்டது. பல்வேறு காரணங்களினால் சோழ நாட்டுச் சிற்றரசர்கள் பலரும் பெருந்தர அதிகாரிகளும் மதுராந்தகனை ஆதரித்துச் சதி செய்ய முற்பட்டதையும் பார்த்தோம். மதுராந்தகனைச்

சிம்மாசனத்தில் ஏறுவதற்குச் சுந்தர சோழர் கண் மூடும் சந்தர்ப்பத்தை அவர்கள் எதிர்நோக்கியிருந்தார்கள். ஆனால் மதுராந்தகனோ அவ்வளவு காலம் காத்திருப்பதற்கே விரும்பவில்லை. சுந்தர சோழருக்குச் சிம்மாசனத்தில் பாத்தியதை இல்லையென்றும், தனக்கே சோழ சாம்ராஜ்யம் வந்திருக்க வேண்டும் என்றும் அவன் எண்ணத் தொடங்கினான். அதிலும் இப்போது சுந்தர சோழர் நோய்ப்பட்டுப் படுத்த படுக்கையாகி இராஜ்யத்தைக் கவனிக்க முடியாத நிலைமையில் இருந்தார் அல்லவா? ஆகலின் ஏன் தான் உடனடியாகத் தஞ்சாவூர் சிங்காதனமேறி இராஜ்ய பாரத்தை ஏற்றுக் கொள்ளக் கூடாது? —

இவ்விதம் மதுராந்தகனுக்கு ஏற்பட்டிருந்த அரசுரிமை வெறியைக் கட்டுக்குள் அடக்கி வைப்பது இப்போது பழுவேட்டரையர்களின் பொறுப்பாயிருந்தது. அவசரப்பட்டுக் காரியத்தைக் கெடுத்துவிட அவர்கள் விரும்பவில்லை. சுந்தர சோழரின் இரு புதல்வர்களும் வீராதி வீரர்கள். அவர்களுடைய வீரச் செயல்களினாலும் பிற குணாதிசயங்களினாலும் குடிமக்களின் உள்ளங்களில் அவர்கள் இடம் பெற்றிருந்தார்கள். கொடும்பாளூர் வேளார், திருக்கோவலூர் மலையமான் என்னும் இருபெரும் தலைவர்கள் சுந்தர சோழரின் புதல்வர்



களை ஆதரித்து நின்றார்கள். சைன்யத்திலேயும் ஒரு பெரும் பகுதி வீரர்கள் சுந்தர சோழரின் புத்திரர்களையே விரும்பினார்கள். ஆகையால் சக்கரவர்த்தி உயிரோடிருக்கும் வரையில் பழுவேட்டரையர்கள் பொறுமையுடன் இருக்கத் தீர்மானித்தார்கள். இதற்கிடையில் சக்கரவர்த்தியின் மனமும் சிறிதளவு மாறியிருந்ததை அவர்கள் அறிந்து கொண்டார்கள். தமக்குப் பிறகு இளவரசர் மதுராந்தகருக்குத்தான் பட்டம் என்று சுந்தரசோழரே சொல்லிவிட்டால் ஒரு தொல்லையும் இல்லை. இதற்குக் குறுக்கே நின்று தடை செய்யக் கூடியவர்கள் இளையபிராட்டியும் செம்பியன் மாதேவியும்தான். இளையபிராட்டியின் சூழ்ச்சிகளை மாற்றுச் சூழ்ச்சிகளினால் வென்று விடலாம். ஆனால் தமிழ்நாடெங்கும் தெய்வாம்சம் பெற்றவராகப் போற்றப்பட்டு வரும் செம்பியன்மாதேவி தடுத்து நின்றால், அந்தத் தடையைக் கடப்பது எளிதன்று. அந்தப் பெருமாட்டி தாம் பெற்ற மகன் சிம்மாதனம் ஏறுவதை விரும்பவில்லை யென்பது எங்கும் பரவியிருந்தது. அன்னையின் வார்த்தையை மீறி மகன் சிங்காதனம் ஏறுவதைக் குடிமக்கள் எப்படி ஏற்றுக் கொள்ளுவார்கள்? ஒன்று, அந்த அம்மாளும் தமது கணவரைப் பின்பற்றிக் கைலாச பதவிக்குச் செல்ல வேண்டும். அல்லது அவருடைய மனம் மாறச் செய்ய வேண்டும். தாயின் மனத்தை மாற்றக் கூடிய சக்தி, பெற்ற பிள்ளையைத் தவிர வேறு யாருக்கு இருக்கக் கூடும்?

ஆதலின் அன்னையிடம் சொல்லி அவர் மனத்தை மாற்றும்படி மதுராந்தகத் தேவரை அடிக்கடி பழுவேட்டரையர்கள் தூண்டிக் கொண்டிருந்தார்கள். மதுராந்தகர் இந்தக்காரியத்தில் மட்டும் உற்சாகம் காட்டவில்லை. இராஜ்யம் ஆளும் ஆசை அவர் உள்ளத்தில் வெறியாக மூண்டிருந்தது. ஆனால் அன்னையிடம் அதைப் பற்றிப் பேச மட்டும் அவர் தயங்கினார். ஏன்?—அந்த மூதாட்டியைச் சந்தித்துப் பேசுவதற்கே அவர் அவ்வளவாக விரும்பவில்லை.

இப்போது, செம்பியன் மாதேவியே தஞ்சைக்குச் செய்தி சொல்லி அனுப்பியிருந்தார். தமது கணவருடைய விருப்பங்களில் முக்கியமானதொரு விருப்பத்தை நிறைவேற்றத் திட்டமிட்டிருப்பதாகவும், அந்தச் சந்தர்ப்பத்தில் தம் குமாரன் தம்முடன் இருக்க வேண்டும் என்றும் தெரியப்படுத்தி யிருந்தாள். அதன்படியே சின்னப் பழுவேட்டரையர் மதுராந்தகரைப் பழையாறைக்குப் போய் வரும்படி கூறினார். இச்சந்தர்ப்பத்தில் தஞ்சைச் சிங்காதனத்துக்குத் தமக்குள்ள உரிமை பற்றித் தாயிடம் வாதாடி அவருடைய மனத்தை மாற்ற முயலும்படியும் சொல்லி அனுப்பினார்.

## பதினேழாம் அத்தியாயம்

# திருநாரையூர் நம்பி

**ம**துராந்தகத்தேவர் தமது பரிவாரங்களுடனும் வந்தியத் தேவனுடனும் பழையாறை நகருக்குள் பிரவேசித்தார். ஆரியப்படை வீடு, பம்பைப் படை வீடு, புதுப்படை வீடு, மணப்படை வீடு முதலான வீரர்கள் வாழும் பகுதிகளின் வழியாக ஊர்வலம் சென்றது. பிறகு கடை வீதிகள், குடிமக்கள் வாழும் பகுதிகள், ஆலயங்கள், ஆலயங்களைச் சூழ்ந்திருந்த சந்நிதித் தெருக்கள் முதலியவற்றின் வழியாகச் சென்றது. ஆங்காங்கு ஒருசிலர் வீட்டு வாசல்களில் நின்று பார்த்தார்கள். ஆனால் மக்களிடையே எவ்வித உற்சாகமும் இல்லை என்பதை வந்தியத் தேவன் கண்டான். முன் முறை அவன் இந்நகருக்குள் வந்திருந்தபோது நகரம் கோலாகலத்தில் மூழ்கியிருந்தது. இப்போது வீதிகள் ஜன சூனியமாயிருந்தன. பழையாறை பாழடைந்த நகரமோ என்று சொல்லும்படி இருந்தது. மதுராந்தகத்தேவர் மீது பழையாறை மக்கள் அவ்வளவாக விசுவாசம் கொண்டிருக்கவில்லை என்பது வெட்டவெளிச்சமாகத் தெரிந்தது. வந்தியத்தேவனுக்கு இது ஒரு விதத்தில் சௌகரியமாக இருந்தது. தன் முகம் தெரிந்தவர்கள் யாரேனும் தன்னைப் பார்க்கும்படி நேரவும் அதனால் தொல்லை ஏற்படவும் இடமில்லை யல்லவா?

இவர்கள் சோழ மன்னர்களின் புராதன அரண்மனை வீதியை நெருங்கிக் கொண்டிருந்த சமயத்தில் இன்னொரு பக்கமிருந்து பெரியதோர் ஊர்வலம் வந்துகொண்டிருப்பதைக் கண்டார்கள். அந்த ஊர்வலத்தின் மத்தியில் திறந்த பல்லக்கு ஒன்று வந்து கொண்டிருந்தது. அதில் இருந்தவர் யார் என்பது நன்கு தெரியவில்லை யாயினும் யாரோ சிவனடியார் என்றும் இளம் பிராயத்தினர் என்றும் தோன்றியது. சிவிகைக்கு முன்னும் பின்னும் ஜனக் கூட்டம் அதிகமாயிருந்தது. கையில் தாளங்களை

வைத்து இனிய ஜங்கார ஓசை எழுப்பிக்கொண்டு சிலர் பல்லக்கின் முன்னாலும் பின்னாலும் பாடிக் கொண்டு வந்தார்கள்.

இடையிடையே "திருச்சிற்றம்பலம்" "ஹர ஹர மகாதேவா!" என்ற கோஷங்களுடன், "திருநாரையூர் நம்பி வாழ்க!", "பொல்லாப் பிள்ளையாரின் அருட் செல்வர் வாழ்க!" என்ற கோஷங்களும் எழுந்து வானை அளாவின.

மதுராந்தகர் அந்த ஊர்வலத்தை அருவருப்பு கொண்ட கண்களினாலே பார்த்தார். பக்கத்திலிருந்த வீரனைப் பார்த்து ஏதோ கேட்டார். "ஆம்; பல்லக்கில் வருகிறவர்தான் திருநாரையூர் நம்பி!" என்று அவன் மறுமொழி கூறினான்.

"இருந்தாலும் என்ன தடபுடல்! இந்த ஊரில் நம்மை யாரும் கேட்பாரைக் காணோம்! இந்த நம்பியைச் சூழ்ந்து கொண்டு ஜனங்கள் இவ்வளவு ஆர்ப்பாட்டம் செய்கிறார்களே?" என்றார் மதுராந்தகத் தேவர்.

அந்த ஊர்வலம் இவர்கள் இருந்த இடத்திலிருந்து சற்றுத் தூரத்திலேயே சென்றது. ஆயினும் பல்லக்கின் அருகிலே வந்தவர்களில் ஒருவர் முன்னொரு சமயம் கொள்ளிட நதியைப் படகிலே தாண்டியபோது ஆழ்வார்க்கடியானோடு சண்டையிட்ட வீர சைவர் என்று வந்தியத்தேவனுக்குத் தோன்றியது.

**ம**துராந்தகத் தேவரும் அவருடைய பரிவாரங்களும் அரண்மனை வீதியை அடைந்து செம்பியன் மாதேவியின் மாளிகையை அடைந்தார்கள். அரண்மனை வாசலிலேயே பெரிய பிராட்டி நின்று கொண்டிருந்தார். யாரையோ வரவேற்பதற்கு ஆயத்தமாக அவர் காத்திருந்ததாய்த் தோன்றியது. மதுராந்தகர் ரதத்திலிருந்து இறங்கி அன்னையின் அருகில் சென்று வணங்கினார். வணங்கிய மதுராந்தகரை உச்சி முகர்ந்து அன்னை ஆசி கூறினார். பின்னர் "மகனே! நல்ல தருணத்தில் வந்துவிட்டாய். திருநாரையூர் நம்பி வந்து கொண்டிருக்கிறார். அவசியமானால் சற்றுச் சிரம பரிகாரம் செய்து கொண்டு விரைவில் சபா மண்டபத்துக்கு வந்து சேர்!" என்று கூறினார்.

மதுராந்தகரின் முகம் பொலிவு இழந்ததை வந்தியத் தேவன் கவனித்துக் கொண்டான். பாவம்! தம்மை வரவேற்பதற்காகவே பெரிய பிராட்டி அரண்மனை வாசலில் காத்திருந்ததாக மதுராந்தகர் எண்ணியிருந்தார் போலும். என்ன ஏமாற்றம்! பல்லக்கிலே பின்னால் ஊர்வலமாக வரும் சிவனடியாரை வரவேற்பதற்குத்தான் அவர் காத்












இருந்தார் என்று தெரிந்ததும் மதுராந்தகருக்கு — நாளைக்குச் சோழ சிம்மாதனத்தில் ஏறலாம் என்று ஆசைப்பட்டுக் கொண்டிருப்பவருக்கு — மிக்க ஏமாற்றமாயிருப்பது இயல்புதானே? அரண்மனையில் மதுராந்தகருக்கு என்று ஒதுக்கப்பட்டிருந்த பகுதிக்கு எல்லாரும் சென்றார்கள். மதுராந்தகர் உடை மாற்றுதல் முதலிய காரியங்களைச் சாவகாசமாகவே செய்து கொண்டிருந்தார். சபா மண்டபத்துக்குப் போக அவ்வளவாக ஆர்வம் கொண்டிருந்ததாய்த் தெரியவில்லை. அன்னையிடமிருந்து ஆள் மேல் ஆள் வந்து கொண்டிருந்தனர். கடைசியாக மதுராந்தகர் புறப்பட்டார். புறப்பட்ட போது, ''அந்த நிமித்தக்காரன் எங்கே?''என்று வினவினார். அவருடன் சபா மண்டபத்துக்குப் போகத் துடிதுடித்துக் கொண்டிருந்த வந்தியத் தேவன், ''இதோ ஆயத்தமாயிருக்கிறேன்'' என்றான். அவனையும் இன்னும் சிலரையும் அழைத்துக்கொண்டு மதுராந்தகர் சபா மண்டபம் போய்ச் சேர்ந்தார்.

மண்டபத்தில் ஏற்கனவே சபை கூடியிருந்தது. ஒரு பக்கத்தில் செம்பியன் மாதேவியும் குந்தவைப் பிராட்டியும், மற்றும் சில அரண்மனைப் பெண்களும் வீற்றிருந்தார்கள். சபையில் நடுநாயகமாகப் போட்டிருந்த பீடத்தில் ஒரு வாலிபர் அமர்ந்திருந்தார். அவர் இளம்பிராயத்தினர். விபூதி ருத்திராட்சதாரி. அவருடைய திருமுகம் களையுடன் பொலிந்தது. அவர் எதிரில் ஓலைச் சுவடிகள் சில கிடந்தன. கையிலும் ஓர் ஓலைச் சுவடியை அவர் வைத்துக் கொண்டிருந்தார். அவர் அருகில் விபூதி ருத்ராட்சதாரியான பெரியவர் ஒருவர் பரவசமாக நின்றார். இன்னும் சபா மண்டபத்தில் ஜனங்கள் நிறைந்திருந்தார்கள். இளைஞர் பல்லக்கிலே வந்தவர்தான் என்பதையும், பக்கத்திலே நின்றவர் முன்பொரு தடவை தான் கொள்ளிடத்துப் படகில் பார்த்தவர் என்பதையும் வந்தியத் தேவன் கண்டு கொண்டான். அவனுடைய கண்கள் சபா மண்டபத்தில் அங்கு மிங்கும் சுற்றிச் சுழன்றாலும் கடைசியில் பெரிய பிராட்டிக்கு அருகில் வீற்றிருந்த குந்தவையின் திருமுகத்திலேயே வந்து நின்றன. குந்தவை தேவியின் கண்களோ முதல் முறை அவனைப் பார்த்ததும் வியப்புக்கு அறிகுறியைக் காட்டின. பிறகு அவன் பக்கம் இளவரசியின் கண்கள் திரும்பியதாகவே தெரியவில்லை. தன்னை ஒருவேளை தெரிந்துகொள்ளவில்லையோ என்றுகூட அவனுக்கு ஐயம் உண்டாயிற்று.

மதுராந்தகர் சபா மண்டபத்தில் பிரவேசித்ததும் பெண்மணிகளைத் தவிர மற்றவர்கள் எழுந்து மரியாதை செய்தார்கள். மதுராந்தகர் தம் பீடத்தில் அமர்ந்ததும் மற்றவர்களும் அவரவர்களுடைய இடத்தில் உட்கார்ந்தார்கள்.

செம்பியன்மாதேவி மதுராந்தகரைப் பார்த்து, ''குமாரா! இந்த இளம் நம்பி திருநாரையூரைச் சேர்ந்தவர். அவ்வூரிலுள்ள பொல்லாப்பிள்ளையாரின் பூரண அருளைப் பெற்றவர். இதுவரையில் யாருக்கும் கிடைக்காத தேவாரப் பதிகங்கள் சில இவருக்குக் கிடைத்திருக்கின்றன. முன்னொரு காலத்தில் நமது சோழ குலத்தில் உதித்த மங்கையர்க்கரசியார் பாண்டிமா நாட்டின் மகாராணியாக விளங்கினார். அவருடைய அழைப்புக்கிணங்கி ஆளுடைய பிள்ளையார் ஞானசம்பந்தர் மதுரைமா நகருக்குச் சென்றார். அங்கே சமணர்களை வாதப் போரில் வென்றார். அச்சமயம் மதுரை மாநகரில் சம்பந்த சுவாமி பாடிய பதிகங்கள் சில இவருக்குக் கிடைத்திருக்கின்றன. அந்தப் பதிகங்களில் நமது சோழ குலத்து மாநரசியைப் பற்றியும் சம்பந்தர் பாடியிருக்கிறார். அந்தப் பாடல்களைக் கேட்கும் போது எனக்கு உடல் பூரித்துப் பரவசமாகிறது. உன் தந்தை இருந்து கேட்டிருந்தால் எவ்வளவோ மகிழ்ச்சியடைந்திருப்பார். நீயாவது கேள்!'' என்று சொன்னார்.

மதுராந்தகர் ''கேட்கிறேன் தாயே! பதிகத்தை ஆரம்பிக்கட்டும்'' என்றார். ஆனால் அவருடைய முகம் அவ்வளவாக மலர்ந்திருக்கவில்லை. அவருடைய உள்ளம் வேறு எங்கேயோ இருந்தது. திருநீறு ருத்திராட்சம் அணிந்த சாதாரண சிறுவன் ஒருவனைப் பெரியதொரு பீடத்தில் நடுநாயகமாக அமர்த்தித் தடபுடல் செய்வதும் அவருக்குப் பிடிக்கவில்லை. அன்னையைத் திருப்தி செய்வதற்காகப் பொறுமையுடன் உட்கார்ந்திருந்தார்.

பொல்லாப் பிள்ளையார் அருள் பெற்ற திருநாரையூர் நம்பியாண்டார் நம்பி, தம் கையிலிருந்த ஓலைச் சுவடியிலிருந்து படிக்கத் தொடங்கினார். ஞான சம்பந்தர் மதுரை மாநகரைப் பார்த்ததும், ''சிவபக்திச் செல்வத்திற் சிறந்த மங்கையற்கரசியார் வாழும் பதி அல்லவா இது?'' என்று வியந்து பாடிய பதிகங்களை முதலில் அவர் பாடினார்.

**''மங்கையர்க்கரசி வளவர்கோன் பாவை**
**வரிவளைக்கைம்மட மானி**
**பங்கயச்செல்வி பாண்டிமா தேவி**
**பணிசெய்து நாடொறும் பரவப்**




# பொங்கல் மலரில் பிற சிறப்பு அம்சங்கள்

குறுநாவல்:

பட்டாம் பூச்சிக்கும் பாசம் உண்டா?

— ஏ. எஸ். சுந்தரராஜன்

நான்கு சிறப்புச் சிறுகதைகள்

* நிழல் உறவு — எஸ். வெங்கடேசன்
* மணி வந்தான் — எஸ். பத்மாவதி
* தீர்ப்பு — வாசவன்
* அழகி — கௌசிகன்

மற்றும் — கவிதைகள் — விசேஷக் கட்டுரைகள்

## அதிகப் பக்கங்கள் 40 காசு

பொங்கழலுருவன் பூத நாயகனால்
வேதமும் பொருள்களும் அருளி
அங்கயற்கண்ணி தன்னொடும் அமர்ந்த
ஆலவா யாவதும் இதுவே!''

''மண்ணெலாம் நிகழ மன்னனாய் மன்னும்
மணிமுடிச் சோழன்றன் மகளாம்
பண்ணினேர் மொழியாள் பாண்டிமாதேவி
பாங்கினாற் பணிசெய்து பரவ
விண்ணுளோர் இருவர் கீழொடுமேலும்
அளப்பரிதாம் வகை நின்ற
அண்ணலார் உமையோடு இன்புறுகின்ற
ஆலவா யாவதும் இதுவே!''

என்னும் பாடல்களைக் கேட்டபோது செம்பியன்மாதேவியின் கண்களிலிருந்து முத்து முத்தாக ஆனந்தக் கண்ணீர் சொரிந்தது. அத்தகைய மங்கையர்க்கரசியாரைப் பெற்ற குலத்தில் தாமும் வாழ்க்கைப்பட்டு மகாராணியாக வாழ் இருக்கக் கொடுத்து வைத்திருந்த பூர்வ ஜன்ம பாக்கியத்தை எண்ணி எண்ணி மனம் பூரித்து மகிழ்ந்தார்.

மதுராந்தகருக்கோ மேற் கூறிய பாடல்களில் 'மண்ணெலாம் நிகழ மன்னனாய் மன்னும் மணிமுடிச் சோழன்' என்னும் வரி மட்டுமே மனத்தில் பதிந்தது. அத்தகைய புராதனப் பெருமை வாய்ந்த சோழர் குலத்து மணி மகுடம் தன் சிரசை அலங்கரிக்க வேண்டியதிருக்க, இன்னொருவர் அதை அபகரித்துக்கொண்டிருப்பதை நினைத்த போது அவருக்கு ஆத்திரம் உண்டாயிற்று.

சம்பந்தர் மங்கையர்க்கரசியாரைப் போய்ப் பார்க்கிறார். பாண்டிமாதேவி அந்தப் பாலகரைப் பார்த்து, ''ஐயோ! இந்த இளம் பிள்ளை எங்கே? பிரம்ம ராட்சதர்கள் போன்ற சமணர்கள் எங்கே? இந்தப் பிள்ளை அவர்களுடன் எப்படி வாதப் போரிட்டு வெல்ல முடியும்?'' என்று கவலையுறுகிறார். அதையறிந்த சம்பந்தர் பாண்டிமாதேவியைப் பார்த்துச் சொல்லுகிறார்:

''மானினேர் விழி மாதராய் வழுதிக்கு
மாபெருந் தேவி கேள்!
பானல்வாயொரு பாலன் ஈங்கிவன்
என்று நீ பரிவெய் திடேல்!
ஆனை மாமலையாதியா
இடங்களிற் பல அல்லல் சேர்
ஈனர்கட் கெளியேன் அலேன் திரு
ஆலவாயரன் நிற்கவே!''

என்ற பதிகத்தைத் திருநாரையூர் நம்பியாண்டார் நம்பி பாடியபோது, செம்பியன் மாதேவி தம்மையே மங்கையர்க்கரசியாகவும் பதிகம் பாடிய நம்பியையே ஞானசம்பந்தராகவும் பாவனை செய்து கொண்டு இந்த உலக நினைவையே மறந்து மனம் பூரித்தார்.

மதுராந்தகத் தேவரோ ''ஆம்; நான் இளம் பிராயத்துச் சிறு பிள்ளைதான்! ஆனால் திருக்கோவலூர் மலையமானுக்கும் கொடும்பாளூர் பூதிவிக்கிரம கேசரிக்கும் அவர்களுடைய ஆதரவைப் பெற்ற சுந்தர சோழரின் புதல்வர்களுக்கும் அஞ்சிவிட மாட்டேன். சம்பந்தருக்கு ஆலவாயரன் அருள் இருந்தது போல் எனக்கும் பழுவேட்டரையர் உதவி இருக்கிறது!'' என்று எண்ணிக் கொண்டார்.

வந்தியத் தேவனின் செவிகளில் பாடல் ஒன்றும் புகவே யில்லை. அவனுடைய கண்களும் கருத்தும் குந்தவை தேவியினிடமே முழுவதும் ஈடுபட்டிருந்தன. இளையபிராட்டி ஒருகால் தன்னைத் தெரிந்து கொள்ளவே யில்லையா, தெரிந்து கொண்டும் பராமுகமா, அல்லது தன்னிடம் ஒப்புவித்த காரியத்தை நிறைவேற்றி விட்டு வந்து உடனே சொல்லவில்லை என்ற கோபமா? என்று இப்படி அவன் மனம் சிந்தித்துக்கொண்டிருந்தது. அத்துடன் இளைய பிராட்டியைத் தனிமையில் எப்படிச் சந்திப்பது, சந்தித்துச் செய்தியை எப்படிச் சொல்லுவது என்றும் அவன் யோசனை செய்து கொண்டிருந்தான்.

பாடல்கள் முடிவடைந்ததும் செம்பியன் மாதேவி நம்பியாண்டாருடன் வந்திருந்த பெரியவரைப் பார்த்து, ''ஐயா! இந்த இளம் பிள்ளையைப் பார்த்தால் ஞானசம்பந்தரே மீண்டும் வந்து அவதரித்திருப்பது போலத் தோன்றுகிறது. இவரை அழைத்துக் கொண்டு தமிழக மெங்கும் ஊர் ஊராகச் செல்லுங்கள். அங்கங்கே கிடைக்கும் தெய்விகமான தேவாரப் பதிகங்களைச் சேகரித்துக் கொண்டு வாருங்கள். அப்பர் பதிகங்களையும், சம்பந்தர் பதிகங்களையும், சுந்தரமூர்த்தியின் பாடல்களையும் தனித் தனியாகத் தொகுக்க வேண்டும். சிவாலயங்கள் எல்லாவற்றிலும் தினந்தோறும் பாடச் செய்ய வேண்டும். இது என் கணவருடைய விருப்பம். அதை என் வாழுளில் நிறைவேற்றிப் பார்க்க ஆசைப் படுகிறேன். நீங்கள் ஊர் ஊராகப் போவதற்கு வேண்டிய சிவிகைகள், ஆட்கள், பரிவார சாதனங்கள் எல்லாம் அளிப்பதற்கு ஏற்பாடு செய்கிறேன். சக்கரவர்த்தியின் அனுமதியைக் கோரி என் குமாரனிடமே செய்தி சொல்லி அனுப்புகிறேன்!'' என்றார். அச்சபையில் அப்போது எழுந்த கோலாகலமான கோஷங்கள் மதுராந்தகரின் செவிகளுக்கு நாராசமாயிருந்தன. (தொடரும்)

# பிரிட்டானியா
# பிரிட்டா
# பிஸ்கட்டுகள்




பிரிட்டானியா

என்றுமே உயர்தரம்

இனிப்பும், மொரமொரப்புமுள்ள பிரிட்டானியா பிரிட்டா பிஸ்கட்டுகள் வாய்நிறைந்தவை, இதமானவை. குழந்தைகள் பெரிதும் விரும்பி சாப்பிடுகின்றனர். இவற்றை அவர்களுக்கு அள்ளிக்கொடுத்து, எப்பொழுதும் மகிழ்ச்சியில் திளைக்கச்செய்யுங்கள்.

BBC-0083

# ராமாயணம்

## ராஜாஜி

## 42. விராதன் தீர்ந்தான்!

மூவரும் தண்டகாரணியப் பெருங் காட்டுக்குள் நடந்து சென்று ரிஷிகள் பலர் வாசம் செய்து கொண்டிருந்த பிரதேசத்தை அடைந்தார்கள். போகும் போதே அங்கே வேள்விக்கான பொருள்களும், முனிவர்கள் உடுத்தும் மரவுரி, ஆசனத்துக்குரிய தோல் முதலியனவும் இங்குமங்கும் இருப்பதைக் கண்டார்கள். அந்த இடமே பார்ப்பதற்கு மிக லக்ஷணமாக இருந்தது. பறவைகளும் மிருகங்களும் பயமின்றிச் சஞ்சாரம் செய்து கொண்டிருந்தன. பழங்கள் நிறைந்து தொங்கும் பல மரங்களைக் கண்டார்கள். வேத மந்திர சப்தம் காதுக்கு இனிமையாக இருந்தது. அருகில் சென்றதும் வயோதிக முனிவர்களுடைய ஒளி வீசும் முகங்களைக் கண்டார்கள்.

ரிஷிகள், மூவரையும் கண்டு அளவு கடந்த மகிழ்ச்சி அடைந்தார்கள். ''அரசனே! நீ எங்களைக் காப்பவன். வனத்தில் இருந்தாலும் நகரத்திலிருந்தாலும் நீ எங்களுடைய அரசன்'' என்றெல்லாம் சொல்லி உபசரித்து அவர்களுக்கு வேண்டியதைச் செய்து தங்க இடமும் காட்டினார்கள்.

மறு நாள் காலையில் எழுந்து, ரிஷிகளிடம் விடைபெற்றுக் கொண்டு காட்டுக்குள் சென்றார்கள். பெருங்காடு, புலி, சிங்கம், ஓநாய் முதலிய மிருகங்களும் பலவித பறவைகளும் நிறைந்த காடு. சுற்றும் முற்றும் பார்த்துக் கொண்டே மெதுவாகச் சென்றார்கள்.

திடீர் என்று மலை போன்ற ஒரு பெரிய உருவம் எதிர்ப்பட்டது. நரமாமிசம் தின்னும் ராக்ஷசன் இடிபோல் கர்ஜனை செய்தான். அவன் வடிவம் சகிக்க முடியாத கோர சொரூபமாக இருந்தது. மாமிசமும் ரத்தமும் படர்ந்த புலியின் தோல், இன்னும் நன்றாக உலரவில்லை. அதைப் போர்த்தியிருந்தான். கையில் ஒரு பெரிய சூலாயுதம். அதில் அப்பொழுது குத்திக் கொன்ற மூன்று சிங்கங்கள், ஒரு யானைத் தலை முதலியவை தொங்கிக் கொண்டிருந்தன.

ராக்ஷசன் ஆயுதத்தைத் தூக்கிப் பயங்கரக் கூப்பாடு போட்டுப் பாய்ந்து சீதையை அப்படியே பிடித்துத் தூக்கிக் கொண்டு, ''யாரடா நீங்கள் இந்தக் காட்டுக்கு வந்திருக்கிறீர்கள்? நீங்கள் யார்? பார்ப்பதற்குப் பாலகர் போல் இருக்கிறீர்கள். வேஷமோ ஜடையும், மரவுரியும் தரித்து முனிவர்கள் போல் நடிக்கிறீர்கள்! கையில் வில்லும் அம்பும்! பக்கத்தில் ஒரு பெண்! ஏன் இப்படிப் பொய் வேடம் போட்டுத் திரிகிறீர்கள்? வெட்கம் இல்லையா? நீங்கள் ரிஷிகளின் சம்பிரதாயத்துக்கும் விரத உடைக்குமே அபகீர்த்தி கொண்டு வருகிறீர்கள். ஏமாற்றித் திரியும் வஞ்சகர்களே! நான் யார் தெரியுமா? நான்தான் விராதன். ரிஷிகளைத் தின்று வருபவன். இந்த அழகி என் பாரியையாக இருக்கட்டும். தெரிந்ததா? உங்கள் ரத்தத்தைக் குடிக்கப் போகிறேன், பாவிகளே!'' என்று கர்ஜனை செய்தான்.

சீதை அவன் கையில் பிடிபட்டு நடுங்கித் துடித்துக் கொண்டிருந்தாள். மனைவியை அரக்கன் பிடித்து எடுத்திருப்பதைக் கண்ட ராமன் தன் அமைதியை இழந்து, ''ஐயோ லக்ஷ்மணா, பார்த்தாயா? எதையும் பொறுக்கும் என்னால் இதைப் பொறுக்க முடியவில்லையே! இதைத் தெரிந்தே பாவி கைகேயி நம்மைக் காட்டுக்கு அனுப்பினாளோ!'' என்று கதறினான்.

சீதையைத் தூக்கி நின்ற அரக்கனை எந்த விதத்தில் எதிர்ப்பது என்று தோன்றாமல் இந்தச் சந்தர்ப்பத்தில் ராமன் தைரியமும் அமைதியும் இழந்து போய்ப் பேசினதைக் கேட்ட லக்ஷ்மணன், குழப்பம் அடையாமல், பாம்பைப் போல் சீறி, ''ராம! இந்திரனுடைய பலம் பெற்றவன் நீ. உன் பக்கத்தில் நானும் இருக்க ஏன் இப்படிப் பேசுகிறாய்? பார், இப்போது என் வில்லும் அம்பும் என்ன செய்யப் போகின்

றன என்பதை! இவன் மடிந்து கீழே விழுந்து, இவன் ரத்தத்தை மண் குடிக்கப் போகிறது. அயோத்தியையில் என் ரோஷத்தை நீ அடக்கினாயே, அந்த ரோஷம் இவன் மேல் இப்போது பாயப் போகிறது! சிறகு கொண்ட மலைகளை இந்திரன் தாக்கியது போல், இவனைத் தாக்கி இவன் உயிரை வாங்கப் போகிறேன்'' என்றான்.

* * *

விராதன் அச்சமயம் மறுபடியும் கர்ஜித்து, ''ஓ! வாலிபர்களே! யார் நீங்கள்? உடனே சொல்லுங்கள்!'' என்றான்.

ராமன் அதற்குள் தெளிந்துவிட்டான். கலவரம் தெளிந்து முகத்தில் வீரம் ஜொலிக்க ஆரம்பித்தது.

''நாங்கள் இக்ஷ்வாகு வம்சத்து ராஜகுமாரர்கள். வனவாசம் செய்ய வந்திருக்கிறோம். நீ யார், சொல்லுவாய்!'' என்றான் ராமன்.

''அப்படியா? தசரத குமாரனே கேள், சொல்லுகிறேன். என் தகப்பனார் பெயர் ஜயன்; தாயார் சதஹ்ரதை. விராதன் என்று என்னை ராக்ஷசர்கள் அறிவார்கள். ஆயுதம் தரிக்கும் க்ஷத்திரியப் பயல்களே, உங்களுடைய ஆயுதங்களால் என்னை ஒன்றும் செய்ய முடியாது. பிரம்மாவிடம் வரம் பெற்றிருக்கிறேன். இந்தப் பெண்ணை விட்டு விட்டு ஓடிப் போங்கள். உயிருடன் தப்புங்கள்!'' என்றான் ராக்ஷசன்.

இதைக் கேட்டதும் ராமனுடைய கண்கள் சிவந்து, கோபம் மேலிட்டு, ''யமனிடம் நீ போகும் சமயம் நெருங்கி விட்டது!'' என்று சொல்லி வில்லை வளைத்துக் கூரிய அம்பொன்றை அரக்கன் மேல் விடுத்தான். அம்பும் அவன் உடலைத் துளைத்துவிட்டு ரத்தத்தோடு நெருப்பைப் போல் பிரகாசித்துக் கொண்டு பூமியை அடைந்தது. ஆனால் அரக்கன் அப்படியே நின்றான். அவன் வலியினால் கோபம் கொண்டு சீதையைக் கீழே வைத்துவிட்டுச் சூலத்தைத் தூக்கி வாயைத் திறந்து கொண்டு ராம லக்ஷ்மணர்கள் மேல் பாய்ந்தான். உடனே ராஜகுமாரர்கள் இருவரும் அவன் மேல் அம்பு மாரி பெய்தார்கள். அம்புகள் பாய்ந்து அவன் உடலில் குத்தி நின்றன. பெரியதொரு முள்ளம் பன்றியைப் போல் காட்சி தந்தான். அரக்கன்



சிரித்து விட்டு ஒரு முறை நெட்டி முறித்து உடலை ஒரு சிலுப்புச் சிலுப்பினான். குத்தி நின்ற அம்புகள் எல்லாம் பலபலவென்று கீழே உதிர்ந்தன. அதன் பிறகு சூலாயுதத்தைத் தூக்கி நின்றான். ராம லக்ஷ்மணர்கள் இரண்டு அம்புகளை விட்டுச் சூலத்தைத் துண்டுபடுத்தி விட்டு, கத்திகளை எடுத்துக் கொண்டு அரக்கன் மேல் பாய்ந்தார்கள். அவனோ இருவரையும் இரண்டு கைகளில் தூக்கி எடுத்துத் தோளின் மேல் வைத்துக் கொண்டு வனத்துக்குள் குதித்துச் சென்றான். அடர்ந்து இருள் மூடிய வனத்துக்குள் ராம லக்ஷ்மணர்கள் மறைந்து போனதைக் கீழே நின்ற சீதை கண்டு உரக்கப் புலம்பினாள்.

அரக்கனுடைய தோளின் மேலிருந்த ராமனும் லக்ஷ்மணனும் அவனுடைய இரு கரங்களையும் ஒடித்துப் பிய்த்து எறிந்தார்கள். ராக்ஷஸன் கீழே விழுந்தான். ஆயுதத்தால் அவனுக்குச் சாவு இல்லை என்பதை அறிந்து கைகளால் அவனை நொறுக்கியும், காலால் மிதித்தும் பிண்டமாக்கினார்கள். அப்படியும் அவன் சாகவில்லை. வரத்தின் பலத்தால் உயிர் போகவில்லை. ஆனால் இம்சையைப் பொறுக்க முடியாமல் கதறினான். கேட்டு அடைந்த வரத்தில் இது விட்டுப் போன அம்சம். மரணம் வந்து அவனுக்குச் சாந்தி தரவில்லை. ஒரு பெருங் குழி வெட்டி அவனை அதில் போட்டு மூடிவிட நிச்சயித்தார்கள்.

அவனே ராமனை அவ்வாறு செய்யும்படி கேட்டுக் கொண்டான். அவன் கழுத்தின் மேல் கால் வைத்து மிதித்துக் கொண்டு நிற்கையில் அரக்கன் சொன்னான்:

"பகவானே! உன் பாதம் என்மேல் பட்டது. எனக்கு அறிவு வந்தது. என் சாபம் உன்னால்தான் தீரவேண்டும். நான் பிறப்பில் அரக்கன் அல்ல. நான் ஒரு கந்தர்வன். நான் பெற்ற வரமே என் விமோசனத்துக்குத் தடையாக இருக்கிறது. எப்படியாவது என் உயிரை மாய்த்தாயானால் நான் மறுபடியும் என் சொரூபத்தை அடைந்து மேல் உலகம் செல்வேன்" என்றான்.

அவ்வாறே ராம லக்ஷ்மணர்கள் ஆயுதமின்றி அவன் உடலை நொறுக்கிப் பிண்டமாக்கிப் பெருங் குழியில் போட்டுப் புதைத்துவிட்டார்கள். அரக்கனும் கந்தர்வர்களுக்குரிய மேலுலகம் எய்தினான்.

பிறகு ராஜகுமாரர்கள் தனியே நின்ற சீதையை அடைந்து அவளுக்கு விஷயத்தைச் சொல்லி, மூவரும் சரபங்க ரிஷியின் ஆசிரமத்துக்குச் சென்றார்கள்.

அவ்விடம் இந்திரன் தன் தேவ கணங்களுடன் வந்து முனிவருடன் பேசிக் கொண்டிருந்தான். ராமன் வந்ததை இந்திரன் அறிந்து தன் பேச்சைச் சீக்கிரம் முடித்துக் கொண்டு மறைந்தான். பிறகு ராமனும் தம்பியும் சீதையும் சரபங்க ரிஷியை வணங்கினார்கள்.

வயோதிக ரிஷியானவர், "உனக்காகத்தான் காத்திருக்கிறேன். நான் என் உடலை நீத்து மேலுலகம் செல்ல வேண்டிய காலம் வந்தபோதிலும் உன்னைக் காணாமல் போக விரும்பவில்லை. அதனால் காத்திருந்தேன். இப்போது என் விருப்பம் பூர்த்தியாயிற்று. என் புண்ணிய பலன்களை உனக்குத் தந்தேன்" என்றார்.

ரிஷி சொன்னதைக் கேட்ட ராமன், "பகவானே! என் புண்ணியத்தை நானே செய்து பெற வேண்டும். எனக்குத் தாங்கள் கொடுத்து நான் பெறுவதில் என்ன இருக்கிறது? நான் எல்லாவற்றையும் விட்டு விட்டுக் காட்டில் வசிக்க வந்திருக்கிறேன்" என்றான்.

(தொடரும்)

---



## மாறுவேடம்

ஆதாரம்:
"இல்லஸ்டிரேட்டட் வீக்லி"

தகவல்:
சரோஜா ராமச்சந்திரன்

பம்பாய் டைம்ஸ் ஆப் இந்தியா நிறுவனத்தில் ஓர் உயர் பதவி வகிக்கும் பதஞ்சலி சேத்தி என்பவர் பிச்சைக்காரர்களைப் பற்றி ஒரு கட்டுரை எழுத வேண்டியிருந்தது. அதற்காக அவர் ஒரு நாள் தாமே பிச்சைக்காரன் போல் மாறு வேடம் போட்டுக் கொண்டு சுறுசுறுப்பான ஒரு தெருவில் நின்று பிச்சை கேட்க ஆரம்பித்தார். பலர் அவரை உதவாக்கரைப் பயல் என்று திட்டிவிட்டுப் போனார்கள். இரக்கப்பட்டவர் சிலரும் உண்டு. மற்ற பிச்சைக்காரர்கள் "ஏன்டா எங்களுக்குப் போட்டியாக வந்தாய்?" என்று கத்தினார்கள்! இப்படி இரண்டு மணி நேரம் பிச்சை எடுத்தார் அந்த அதிகாரி! அவருக்குக் கிடைத்தது ஆறு ரூபாய்!

---



படங்கள் :
○ விளையாட்டு அரங்கமும் அணிவகுப்பும்.
○ இசையும் நாட்டியமும்
○ ஒவியமும் கலைப் பொருட்களும்.



# தபால் கலை

தபால் தந்தி இலாக்கா அவ்வப்போது தபால் தலைகளை விநியோகிப்பதுடன் நிற்பதில்லை; தபால் கலையையும் விநியோகிக்கிறது என்பது அண்மையில் புரிந்தது. அகில பாரதத்திலும் பரவி நின்று சேவை செய்யும் தபால் தந்தி இலாகா ஊழியர்கள், கலை ஆர்வத்தையும் விளையாட்டு ஆர்வத்தையும் சென்னைவாசிகளுக்குச் சென்ற டிசம்பர் மாத மத்தியில் காண்பித்தார்கள்.

மூன்று தினங்கள் தொடர்ந்தாற்போல் பாலர் அரங்கத்திலிருந்து சித்தாரும், சாரங்கியும், தபேலாவும் மிருதங்கமும் வீணையும் வயலினும் பரதம், கதக், கதகளி முதலிய நாட்டியங்களுக்கான சதங்கை ஒலியும் கேட்டுக்கொண்டேயிருந்தன.

குஜராத்திலிருந்து வந்த ஆறு ஊழியர்களைக் கொண்ட குழு இரு நீண்ட மூங்கில் கம்புகளை வைத்துக் கொண்டு அவைகளைத் தட்டுவதால் ஏற்படும் ஓசையை இனிய தாளமாக மாற்றி ஒருவித கிராமிய நடனத்தை ஆடிக் காண்பித்தார்கள். பார்ப்பவர்களைப் பிரமிக்க வைத்தது!

தமிழகத்தின் பிரதிநிதிகள் அதிக எண்ணிக்கையில் முதல் பரிசுகளைப் பெற்றதால், 'கலைக் கேடயம்' இந்த ஆண்டு தமிழகத்தினிடம் ஒப்படைக்கப்பட்டது.

கலைக்கு விளையாட்டு ஒன்றும் சோடைபோகவில்லை என்று காண்பிப்பதுபோல், ராஜரத்தினம் விளையாட்டு அரங்கு இதே நாட்களில் கலகலவென்று இருந்தது.

ஆண்களுக்கான போட்டிகளில் அதிகபட்ச வெற்றிகளைப் பெற்றது ஆந்திரப் பிரதேசம். தயானந்த சுவாமி என்னும் இளைஞர், மற்றவர்களுக்குத் தயவு தாட்சிண்யம் காட்டாமல் நிறைய முதல் பரிசுகளைத் தட்டிக் கொண்டு போனார். பெண்மணிகளுக்கான போட்டிகளில் முதல் இடத்தைத் தட்டிக்கொண்டு போனவரும் ஆந்திரப் பிரதேசத்தைச் சேர்ந்தவரே. குமாரி ரோஸாரியோ தான் அவர். விளையாட்டுக்கான வெற்றிக் கேடயம் இந்த ஆண்டு ஆந்திராவுக்குப் போய்ச் சேர்ந்தது.

விளையாட்டுகளுக்கான பரிசுகளை வழங்கியவர் தபால் தந்தி இலாகா டைரக்டர் ஜெனரல் ஸ்ரீவத்ஸவா அவர்கள்.

மியூஸியம் நூற்றாண்டு மண்டபத்தில் கலைப்பொருள் கண்காட்சி ஏற்பாடாகியிருந்தது. இலாக்கா ஊழியர்களும் அவர்கள் குடும்பத்தினரும் தங்கள் கலைத் திறனைக் காண்பிக்க ஒரு வாய்ப்பு.

மார்கழி மாதத் திருப்பாவையை நினைவூட்டும் வகையில் அற்புதமான ஆண்டாள் பொம்மை ஒன்று ஸ்ரீமதி ஜானகி ஸ்ரீனிவாசன் என்பவர் தயாரித்து அனுப்பியிருந்தார். ஆனால் முதல் பரிசு பெறும் அதிர்ஷ்டம் அந்த ஆண்டாளுக்கு இல்லை. ஆண்டாள் பக்கத்தில் அமர்ந்திருந்த மார்வாரிப் பெண்ணுக்கு அந்த அதிருஷ்டம் கிட்டியது.

அதனால் என்ன? அந்தப் பொம்மையும் அதே அம்மையாரின் சிருஷ்டிதானே!

இந்த மூன்று நாள் கல்யாணத்துக்கு முன்னும் பின்னும் பெய்த மழை, இந்த நாட்களில் சற்றுத் தலைமறைவாகப் போய், தன்னாலான உதவியைச் செய்தது.

— கோமதி சுவாமிநாதன்

புகைப்படங்கள் :
எம். ஆர். வெங்கட்ராமன்



# இரவிலே கடுமையாகும் இருமலை நிறுத்த அதிகச் சக்தி வாய்ந்த மருந்து!



இருமலைக் கட்டுப்படுத்தும் கேந்திரம் கிளர்கிறது.



ஃபார்முலா 44 இருமலைக் கட்டுப்படுத்தும் கேந்திரத்திற்கு இதமளிக்கிறது




இருமல் தொடங்கும் கட்டுப்பாட்டுக் கேந்திரத்திலேயே உடனடியாகவும், அதிகச் சக்தியுடனும் செயல் புரிகிறது விக்ஸ் ஃபார்முலா 44. எனவே உங்கள் இருமல் நின்று விடுகிறது.

அதேசமயம், இந்த நவீன இருமல் மிக்சரில் சேர்ந்துள்ள மருந்துப்பொருள்கள் உள்ளே ஊடுருவி, சுவாசக் குழாய்களின் அடைப்பை நீக்குகின்றன. வயிலிருந்து மார்புச் சளியை அகற்றி தொண்டை எரிச்சலுக்கும் இதமளிக்கின்றன.

அதிகச் சக்தி வாய்ந்த விக்ஸ் ஃபார்முலா 44 அருந்தி இரவில் கடுமையாகும் இருமலிலிருந்து விரைவிலே நிச்சயமான நிவாரணம் பெறுங்கள். அயர்ந்த உறக்கமும் உங்களுக்குக் கிடைக்கும்.

ஹீர

**விக்ஸ் பார்முலா 44 காஃப் மிக்சர்**

# ரகுபதி ராகவ

# மகாத்மா காந்தி

தமிழாக்கம்: **ராஜாஜி**

## 13.(ர) இயற்கை கடவுள் நியதியே

கடவுளினுடைய சட்ட திட்டங்கள் நமக்கு இன்னும் முற்றிலும் தெரியாது. அவை இயங்கும் விதமும் நாம் முற்றிலும் அறியவில்லை. மேம்பட்ட பௌதிக விஞ்ஞானிகள் கண்டதும் சாஸ்திர தத்துவார்த்தம் கற்ற பண்டிதர்களினுடைய அறிவும் ஆண்டவனுடைய நியதிகளின் அடங்கலுக்கு ஒரு துகள் மாத்திரமே ஆகும். கடவுளை நான் என்னைப் பெற்ற தகப்பனைப் போல் ஒரு பூத உடல் கொண்டவனாகப் பாவிக்கா விட்டாலும் அதைவிட மிஞ்சிய அபார சம்பந்தம் கொண்டவனாகக் கருதுகிறேன். என்னுடைய வாழ்க்கையில் ஒவ்வொரு சிறு விஷயத்திலும் அவன் என்னை ஆட்படுத்துகிறான். ஒவ்வொரு இலையும்கூட அவன் ஆணையின்றி அசைவதில்லை என்பது என்னுடைய நிச்சயமான கருத்து. வெறும் உபசாரப் பேச்சு அல்ல. நான் விடும் ஒவ்வொரு மூச்சும் அவன் சம்மதத்தைப் பொறுத்து நிற்கிறது.

(ஹரிஜன் 16-2-34)

அவன் வேறு, அவன் நியதி வேறு அல்ல. நியதியே கடவுள் என்று கருதலாம். ஆண்டவனுக்கு நாம் கூறும் குணங்கள் வெறும் இலக்கணங்கள் அல்ல. இலக்கணமே அவன், அவனே இலக்கணம். அவனே சத்தியம், அன்பு, நியதி - இன்னும் நாம் தேடிச் சொல்லக் கூடிய கோடிக்கணக்கான தத்துவங்களும்.

இயற்கை விதிகள் மாறுதலை. அவற்றுக்குப் புறம்பாக எதுவும் நடைபெறாது. அந்த விதிகளுக்கு விலக்கு என்பது இல்லை. இயற்கை விதிகளுக்கு விலக்காக நடைபெறுவதுதான் அற்புதம் என்றால் அவ்வித அற்புதங்கள் நடக்க இடம் இல்லை. அவனுக்குக் காலம் என்பது இல்லை. அவனுடைய காலம் முதலும், நடுவும், முடிவும், அளவும் அற்றது. நமக்குத்தான் இறந்த காலம், நிகழ்காலம், வருங்காலம் என்கிற கால பேதம். நாம் வாழும் நூறு ஆண்டுகள் அனந்த காலத்தில் எம்மாத்திரம்! ஒரு தூசித்துகளுக்கும் ஆகாது. (ஹரிஜன் 17-4-37)



நான் செய்திருக்கும் சட்டங்களை மாற்றும் உரிமையை ஆண்டவன் வைத்துக்கொள்ளவில்லை. அப்படி மாற்ற வேண்டிய அவசியம் அவனுக்கு என்னத்துக்கு? அனந்த வீரியமும் அனந்த அறிவும் பெற்றவன் அல்லவோ அவன்! கழிந்ததும், நிகழ்வதும், வருவதும் அனைத்துமே அவனுக்கு ஒரு சிரமமும் இன்றி ஒரே சமயத்தில் அவன் காண்பான் அல்லவா? ஆனபடியால் அவன் ஏன் எதையும் மாற்ற வேண்டும்? ஏன் எதையும் புனராலோசனை செய்யவேண்டும்? திருத்தவோ மாற்றவோ சீர்ப்படுத்தவோ அவனுக்கு அவசியமில்லை.

(யங் இந்தியா 25-11-26)

பூவுலகில் நாம் வாழும் வாழ்க்கை, மாதர்கள் அணிகிற உடைந்து போகும் கண்ணாடி வளையல்கள் மாதிரி, நிலையற்றது. ஒரு பெட்டியில் போட்டுப் பத்திரப்படுத்தினால் ஆயிரம் ஆண்டுகள்கூட அந்த வளையல்கள் நிற்கும். ஆனால் நம்முடைய ஆயுளோ ஓர் இமைப்பொழுதில் அழிந்து போகக் கூடும். ஆனபடியால் உயிருள்ளபோதே, இப்போதே, உள்ளங்களைச் சுத்தி செய்து கொள்ளுவோம். ஏழை என்றும், தனவன் என்றும் வித்தியாசப்படுத்திக் கருதுவதை ஒழிப்போம். ஒரு பூகம்பமோ வெள்ளமோ வேறெதுவும் விபத்தோ அல்லது நடைமுறையில் வரும் மரணமோ நம்மை வந்து எய்துவதற்குள் ஆண்டவன் முன்னிலையில் நிற்பதற்கு ஆயத்தம் ஆவோம்.

(ஹரிஜன் 2-2-34)

# கண்ணுங்கருத்துமாக குழந்தைகளைப் பேணும் தாய்மார்களுக்கு




தாயன்பைப் போலத் தூய்மையானது ஆஸ்டர்மில்க். ஜீரணிக்கச் சுலபமானது. எனவே இதிலுள்ள வைட்டமின்களும், இரும்புச் சத்தும் புரதமும், உடலில் பொருந்தி, பயனளிக்கின்றன. இவை குழந்தையின் தேவைகளுக்கேற்ற அளவுகளில் அடங்கியுள்ளன.

ஒப்பற்ற ஆஸ்டர்மில்க் உலகெங்கும் விவேகமுள்ள தாய்மார்களின் தேர்வு—உங்களைப் போன்ற தாய்மார்களின் தேர்வு.

# ஆஸ்டர்மில்க்

*உலகெங்கும் மிகுநம்பகமான பாலுணவு*

ஒரு க்ளாக்ஸோ தயாரிப்பு

*Creative Unit-218*

# அற்புதம் செய்த அன்புச் சகோதரி

பெண்கள், பள்ளிக்குச் சென்று படிப்பது ஓர் அற்புதமா என்றுதான் இன்று தோன்றும். ஐம்பது, அறுபது ஆண்டுகளுக்கு முன் நம் சமூக சிந்தனை எப்படி இருந்தது என்று அறிந்தாலே அதற்கு எதிர்நீச்சப் போட்டுப் பெண் கல்வியைப் பரப்பிய பெருமாட்டியான காலஞ்சென்ற சகோதரி சுப்பலக்ஷ்மியின் பணி எவ்வளவு அற்புதமானது என்று புரியும்.

இப்போது சாதாரணமாகப் பெண்கள் பட்டப் படிப்புப் படித்து முடிந்த பின்தான் திருமணம் நடத்துகிறோம். ஆனால் சகோதரி சுப்பலக்ஷ்மியின் இளமைக் காலத்தில் — இன்றைய மக்கள் தொகையில் பாதியே இருந்த இந் நூற்றாண்டுத் தொடக்கத்தில் — அம்மக்கட் தொகையில் மூன்றே சதவிகிதம் உள்ள பிராமண சமூகத்தில் மட்டும், சென்னை மாகாணம் ஒன்றிலேயே பதினைந்து வயதுக்குட்பட்ட 22,000 விதவைகள் இருந்தனராம்!

இறைவனின் கருணை விசித்திரமானது! இப்படிப்பட்ட ஆயிரமாயிரம் விதவைகளின் இன்னல் நீரவும் — எதிர்காலத்தில் இப்படிப் பட்ட குழந்தைப் பருவக் கலியாணமும், கன்னிகைப் பருவக் கைம்மையும் நேராதிருக்கவும் — இறைவனின் கருணையே வெகு கடுமையான உருக்கொண்டது. கன்னி சுப்பலக்ஷ்மி கணவன் என்றால் என்ன என்று புரிந்து கொள்ளும் முன்பே கைம்பெண் ஆனாள். தனக்கு நேர்ந்த கொடுமையிலிருந்தே அவள் எழுச்சி பெற்று அக்கொடுமைக்கு ஆளானவர்களை யெல்லாம் காக்கும் ரட்சகியானாள்.

''இது எதிரே வந்துவிட்டது. அபசகுனம் தான்'' என்று தன்னைக் குறித்து இரு ஆத்திர மாதர் பேசக் கேட்டாள் சுப்பலக்ஷ்மி. அந்தக் கணமே ஒரு மகத்தான லட்சியத்துக்கு அவள் தன்னை ஆன்ம நிவேதனம் புரிந்து கொண்டாள்: ''நான் எதிரில் வருவதா அபசகுனம்? என் பெயரே சுப லக்ஷ்மி. கைம்பெண்களுக்கு மெய்யாகவே நான் சுபலக்ஷ்மியாக இருப்பேன்'' என்று பிரதிக்ஞை பூண்டாள்.

'ஏட்டையும் பெண்கள் தொடுவது
தீமையென் றெண்ணியிருந்தவர்
மாய்ந்துவிட்டார்
வீட்டுக்குள்ளே பெண்ணைப் பூட்டி
வைப்போமென்ற விந்தை மனிதர்
தலைகவிழ்ந்தார்'

என்று பாரதி பாடிய புரட்சிக்கு ஆணி வேர் சகோதரி சுப்பலக்ஷ்மியே. ஆனால் அவரது புரட்சி முரட்டுத்தனமானதல்ல. அது மென்மையானது; அன்பு மயமானது; பண்பு நிறைந்தது. பழமையான அனைத்தையும் குலைக்கவோ, பாரதப் பெண்குலத்தின் உள்ளார்ந்த பண்புகளைச் சிதைக்கவோ ஒருகாலும் முற்படாமலே, பெண் கல்வி, பால்ய விவாகம், இளம் விதவைகள் பிரச்னை முதலியவற்றுக்கு அரிய தீர்வு கண்டவரவர்.

இந்தியப் பண்பில் ஊறித் திளைத்த அதிசயப் புரட்சியாளர் அவர் என்பதற்குக் குறிப்பாக ஓர் உதாரணம் கூறலாம். 1922ல் பிரிட்டிஷ் கோமகன் சென்னைக்கு வந்தபோது அவருக்குச் சமூகத்தில் சிறப்புப் பெற்ற சீமாட்டிகள் பலர் அறிமுகம் செய்யப்பட்டனர். அவர்களிடம் கோமகன் மேலை நாட்டு வழக்கப்படி கைநீட்டியபோது அவர்கள் தயங்காமல் கைகுலுக்கினர். ஆனால் சகோதரி கைகுலுக்கவில்லை. 'நமஸ்தே' என்று கும்பிடு மட்டுமே போட்டார். 'மன்னர் மகன் மரியாதைக் குறைவாக நினைக்கப் போகிறாரே' என்று மற்றோருக்கு கலவரம். கோமகனோ விஷயம் புரியாதவராக இரண்டாம் முறை கை நீட்டினார். சகோதரி அப்போதும் அமைதி குலையாமல் அதே கும்பிடுதான் போட்டார். மூன்றும் முறையும் கைநீட்டியபோதுதான் கோமகனுக்கு விஷயம் புரிந்தது. அவரும் சகோதரியைப்போலவே 'நமஸ்தே' போட்டுவிட்டு, அவரிடம் உள்ளார்ந்த மரியாதையுடன் மேலே நடந்தார். 'நம்மை ஆளும் ராஜகுமாரனாயினும் உபசாரப் பண்புக்காகக் கூடப் பரபுருஷன் தொடுவதற்குப் பாரதப் பெண் அநுமதியாள்' என்றார் சகோதரி.

சகோதரி பெரிய சீர்திருத்தவாதி என்பது மட்டும் அவரது பெருமை அல்ல. சீர்திருத்தம் எங்கே நிற்க வேண்டும் என்று அவர் அளவு அறிந்திருந்ததே அதனினும் பெருமை.

சகோதரிக்குப் பிரிட்டிஷ் அரசாங்கம் கெய்ஸர் — இ — ஹிந்த் பட்டம் அளித்தது. சுதந்திர பாரதம் 'பத்மஸ்ரீ' விருது அணிவித்தது. ஆனால் புகழை விரும்பாமலே பணி புரிந்தவர் அவர். தினமும் கீதா பாராயணம் செய்து, அதன் பொருளான கர்மயோகத்தை வாழ்ந்து காட்டியவர் சகோதரி.

புண்ணிய சரித்திரம் பூர்த்தியாகி விட்டது! புண்ணியவதியின் சீர்திருத்தமும் முன்னரே நிறைவு பெற்று விட்டது. இனி அந்தச் சீர்திருத்தம் அவர் விரும்பிய அளவோடு நின்று, பாரத மண்ணின் பண்பு மீறாமல் பொலியச் செய்வதே மறைந்த மகான்மாவுக்குச் செலுத்தக்கூடிய அஞ்சலி. **ரா. கணபதி**



நீலாவையும், ரவியையும் ஏற்றிச் சென்ற கப்பல் இலங்கைத் தீவின் கடற்கரை ஓரத்தில் நங்கூரமிடுகிறது. அங்கு இந்தக் கப்பலை எதிர்பார்த்துத் தயாராக இருந்த படகு அவ்விருவரையும் ஏற்றிக் கொண்டு கரை சேர்கிறது. குணவர்த்தனா என்ற சிங்களவக் கிழவரின் விருந்தினர்களாக குழந்தைகள் தங்கி ஓய்வெடுத்துக் கொண்டிருக்கிறார்கள். கங்சிங்கிடமிருந்து மேலே என்ன செய்ய வேண்டும் என்பதற்கான தகவலுக்காகக் காத்திருக்கிறார்கள்.

பொன்னாலான புத்தர் சிலையைத் தேடி வந்த இந்திரபால், தான் உளவறிந்து கண்ட முக்கியமான செய்திகளை பாரதத்தில் உள்ள ஹரிசரண் வர்மாவுக்கு முன்னமே அனுப்பியிருந்தான். சீனாவிலிருந்து அதை மீட்க முன்பே ஒரு முயற்சி நடந்திருக்கிறது. (யாரால், எப்படி, எப்போது என்ற விவரங்கள் ஏதும் சரிவரக் கிடைக்கவில்லை) அம்முயற்சி பூரண வெற்றி பெறவில்லை. சீன நாட்டிலிருந்து புத்தர் சிலையை வெளியேற்றிக் கப்பலில் கடத்தி வரும்போது கப்பல் புயலில் சிக்கி மூழ்கியது. புத்தர் சிலையும் அத்துடன் மறைந்தது. சிலை சமுத்திரத்தில் மூழ்கியதா அல்லது வேறு எங்காவது அப்புறப்படுத்தப்பட்டதா? இதற்கான தகவல்களைத் தேடிக் கொண்டிருந்தபோதுதான், இந்திரபால் கம்யூனிஸ்டு சீனர்களின் குண்டுக்குப் பலியானான்.

அந்தச் சிலையைக் கைப்பற்றித் தமதாக்கிக் கொள்ளத் தீவிரமாக முயன்று கொண்டிருந்த சீனர்களுக்கே கூட இந்திரபாலிடம் சிக்கிய அந்த மிக முக்கியமான தகவல்கள் கிடைக்கவில்லை. ''லீ''யின் முயற்சிகள் தோல்வியுற்றதின் விளைவாக, கம்யூனிஸ்ட் சீனர்களின் வேவு இலாகா நீலா, ரவியை ரகசியமாகப் பின்தொடர்ந்து செயல்படத் தங்கள் ஆள் ஒருவனையும் அவர்கள் பின்னாலேயே அனுப்பியது. அந்த ஆள் குழந்தைகளுக்கு முன்னமேயே இலங்கைத் தீவுக்கு வந்து விட்டான். விடுதலைப் போரில் முழு ஈடுபாடு கொண்டிருந்த காரணத்தினால் கம்யூனிஸ்ட்களின் இந்த முன்னேற்பாடு கங்சிங்கிற்குத் தெரியாமல் போயிற்று. இலங்கையிலோ அதை அடுத்துள்ள எங்கோ ஓர் இடத்திலோ அந்தப் புத்தர் சிலை புதையுண்டு கிடக்கலாம். அப்படி ஒரு யூகத்தை உண்டாக்கியிருந்தான் இந்திரபால். அது எங்கே? இந்திரபாலினால் விடுவிக்க முடியாத இந்தப் புதிரை நீலாவும் ரவியும் விடுவிக்கிறார்களா? மேலே படியுங்கள்.






கடலில் இந்தப் பக்கமாக
வரும் கப்பல்களையெல்லாம்
தன் வாயினால் ஊதி சூழிக்
காற்றை உண்டாக்கிமூழ்
கடித்து வந்தாளாம்....

கேட்கவே பயமாக
இருக்கிறதே.

நீலா கதை கேட்டுக் கொண்டிருக்கும்
போது ஓடி வருகிறான் ரவி....

அக்கா, கடற்கரையில் ஓர் அழ
கான புதிய விசைப் படகு வந்து
பாரேன்! யாரோ அயல் நாட்டுக்
காரர்கள் போலிருக்கிறது..

இந்த ஒதுக்குப் புறமான
கடற்கரைக்கா வந்தி
ருக்கிறார்கள்?

ஒரு வேளை சுங்சிங்
நமக்கு ஏதாவது செய்தி
அனுப்பி இருப்பாரோ?

வாயேன் எதுக்
கும் நீந்திச் சென்று
அருகே போய்ப் —
பார்ப்போம்..

அயல் நாட்டவர்களிடம் சிங்களச் சிறுவர்
கள் கடலுள் மூழ்கிக் காட்டும் தங்கள் திறமை
வெளிப்படுத்தக் காசுகளை நீருள் வீசச் —
சொல்லி அதை எடுத்துக் காட்டுவார்கள். இவர்
களை அப்படியாக எண்ணிவிட்டார் விசைப்
படகிலிருந்தவர்....

JALA
BUDDHA

அக்கா, முக்குளித்
துக் காசுகளை
எடுப்போமா?

படகின் பெயர் ஜல..
புத்தாவாமே! புத்தர்..
அப்படியானால்.. இவர்
கள் பாரத நாட்டவரா?

நீலாவும் ரவியும் நீருள் மூழ்கிக் காசுகளை எடுக்கிறார்
கள்......

படகில் இருப்பவர்
இந்தியராக இருக் —
குமோ? இந்தக் கிரா —
மத்தை நாடி வருவா
னேன்?

அதே சமயம் படகில்......

ஷோபா! நாம் தேடி வந்துள்ளது
இந்த ஊர்தான். அந்தக்
குகையின் மர்மம் நமக்கு இங்கு
விளங்குமானால் நாம் வந்த
காரியமும் வெற்றியடையும்.

தொடரும்..

# பூங்கா நகரம்—
# 60 ஆண்டுகள் முன்பே திட்டமிட்டு உருவானது

ஜாம்ஷெட்பூர்: வண்ணமலர்சோலைகள் மிகுந்தது, எஃகு நகரமென அழைக்கப்படும் ஜாம்ஷெட்பூர். அது உண்மை! இந்தியாவின் எழில் மிகு நகரங்களில் அதுவும் ஒன்று. மேனாட்டில் திட்டமிட்ட நகர்நிர்மாணங்கள் சர்வசாதாரணம். ஆயினும், அதனினும் அறுபது ஆண்டுகளுக்கு முன்பே ஜாம்ஷெட்பூர் திட்டமிட்டு உருவானதென்பது வியப்பேயாகும்.





ஜூபிலி பூங்கா: "மனிதர்களுக்கும், அவர்தம் உணர்ச்சிகளுக்குமான அடிப்படைத்தேவையை, எஃகு மற்றும் இரும்பைக்காட்டிலும், மலர்களும் பூங்காக்களும், மரங்களும் பூர்த்தி செய்கின்றன என்று நான் கருதுகிறேன். அந்த சிறந்த சிந்தனையின் தோற்றமே இப்பூங்கா."
—ஜவாஹர்லால் நேரு



சோனாரி— திருத்தியமைக்கப்பட்ட குடியிருப்பு. பல கட்டங்களில் திட்டமிட்டு, 20 குப்பங்களை, நல்ல வெளிச் சமுள்ள சாலைகள், பொதுவான தண்ணீர் வசதிகளுடன் சிறந்த குடியிருப்புகளாக மாற்றியமைக்க டாடா ஸ்டீல் உதவி செய்துள்ளது.



டாடா பெரிய மருத்துவ மனை: வசதிகளுடன் 600 படுக்கைகள் பெற்றது இந்த மருத்துவமனை, தன் 82 படுக்கைகளுடன் ஒரு காசநோய் மருத்துவ மனையும் அதில் ஒரு குழந்தைகள் வார்டும் அமைக்க டாடா ஸ்டீல் உதவியுள்ளது.

# எழுபதே! ஏமாற்றம் அளிக்காதே!

## தேசிய நோக்கில் : திரு கே. எஸ். ராமானுஜம்



ஒரு தொழில் நிறுவனத்தைச் சேர்ந்தவர் மத்திய மந்திரி ஒருவரைச் சந்திக்க விரும்பினார். அமைச்சரின் காரியாலயத்தில் ஓர் உயர் அதிகாரி ''மந்திரியைத்தானே பார்க்க வேண்டும்? ஆஹா! ஏற்பாடு செய்யலாம்! ஆனால் அதற்கு முன் கிரிக்கெட் டெஸ்ட் மாட்சுக்கு நான்கு அறுபது ரூபாய் டிக்கட்டு வாங்கிக் கொண்டு வாரும்!'' என்று சொன்னார். காரியமாக வேண்டுமே! கறுப்பு மார்க்கெட்டில் அந்த டிக்கெட்டை வாங்கிக் கொடுத்தார் தொழிலதிபர்.

கல்கத்தாவிலுள்ள வியாபார ஸ்தாபனத்தில் வேலை பார்க்கும் சிப்பந்தி ஒருவர், தம் பிராவிடெண்டு பண்டுக் கணக்கிலிருந்து இருநூறு ரூபாய் கடன் வாங்கினார். அன்று மாலை அந்த ஸ்தாபனத்தின் தலைவர் வீட்டுக்குக் கிளம்பிக் கொண்டிருக்கும்போது சிப்பந்தி அவர் அருகில் தயங்கியவாறு வந்தார். ''ஐயா! மனைவி உடல் நலமில்லாமல் ஆஸ்பத்திரியில் இருக்கிறாள். ஆஸ்பத்திரிச் செலவுக்காகத்தான் இன்று பணம் கடன் வாங்கியிருக்கிறேன். ஆஸ்பத்திரி வரை இந்தப் பணத்துடன் போகப் பயமாக இருக்கிறது. தயவுசெய்து என்னை உங்கள் காரில் ஆஸ்பத்திரி வரை கொண்டு போய் விட வேண்டும்'' என்றார். அந்தத் தலைவர் பதில் சொல்லாமல் கார்க் கதவைத் திறந்து விட்டார்.

இன்று கல்கத்தாவில் சம்பளப் பட்டுவாடா தினத்தன்று இருபது முப்பது பேர்களாகச் சேர்ந்துதான் வீடுகளுக்குப் போகிறார்கள். தனியாகப் போக அஞ்சும் நிலை.

தணிக்கை செய்யப்படாத வெளிநாட்டுப் படங்களைத் தில்லியில் நடந்த திரைப் பட விழாவில் பார்க்க இரண்டு ரூபாய் டிக்கட்டுக்கு இருநூறு ரூபாய் கொடுத்துச் சிலர் வாங்கினார்கள்.

இது போன்ற சூழ்நிலைகளும் மட்டமான மனநிலைகளும் எழுபதிலும் தொடர வேண்டுமா, என்ன?

## மாணவர் உலகில் : திரு மு. வரதராசனார்



அறுபத்தி யொன்பதில் கல்லூரிகளை ஒவ்வொன்றாகக் கால வரையறை இல்லாமல் மூட ஆரம்பித்தார்கள். இது ஒரு வகையிலே பழைய வியாதி என்றாலும், எழுபதில் குணமாகிவிடாதா என்று நம்பிக்கையை ஏற்படுத்திக் கொள்வதில் தவறில்லையே! மாணவர் உள்ளங்களில் ஏதோ புரியாத குழப்பம். புயல் அடித்தால் நாட்டின் ஒரு பகுதியில்தான் சேதம் ஏற்படும். ஆனால் மாணவரிடையே எழும் அமைதியின்மை என்னும் புயல் நாடு முழுவதையும் பாதிக்கிறது. பிற்காலத்தில் வேலை வாய்ப்பின்மை என்ற அச்சம் இந்தக் கொந்தளிப்புக்குக் காரணமாக இருக்கலாம் என்று சொல்லப்படுகிறது. அதற்காக இப்போது படிப்பில் கவனம் செலுத்த வேண்டிய காலத்தில் குழம்பத் தொடங்கி விடுகிறார்கள் என்றும் சொல்லப்படுகிறது. இதில் உண்மை இருக்கலாம்.

ஆனால் மாணவர் சமூகம் சுயமாகச் சிந்திக்க மறுக்கிறது. பொறுப்பை உணர மறுக்கிறது என்றுதான் நான் நினைக்கிறேன். பிறருடைய சிந்தனைகளைத் தாங்கி — சிந்தனை என்று சொல்லக் கூடத் தயங்குகிறேன்; திட்டங்கள் என்றுதான் சொல்லுவேன் — சூழ்நிலைகளை மறந்து உணர்ச்சி வசப்பட்டுச் செயலாற்றத் தொடங்கி விடுகிறார்கள். சமூகத்தின் எதிர்காலம் இதனால் எவ்வளவு தூரம் பாதிக்கப்படுகிறது என்பதை மறந்து விடுகிறார்கள்.

அரிசி, கறிகாய் முதலியவை எப்படி வியாபாரப் பொருட்களாய்க் கருதப்படுகின்றனவோ அதே போல் அபிப்பிராய பேதங்களும் செயல்பாடுகளும் கூட வியாபாரப்

பொருள்களாகிவிடுகின்ற காலம். இன்னொரு சமூகத்திடம் இந்தப் பொருள்கள் சுலப மாக விலை போகின்றன.

கல்வியை அளிக்கும்போதே அவர்களுடைய பிற்காலத்துக்கு உறுதி அளிக்கும் திட்டங்கள் தேவை. அப்போது அவர்கள் தன்னம்பிக்கையுடன் செயலாற்றுவார்கள். எழுபதில் இதை எதிர்பார்ப்போம்.

## மதலைகளின் மனத்தில்: குமாரி ஏ. சாந்தி



என்ன மாமா கேட்கிறீங்க? புது வருஷம் எப்படி இருக்கணும்னு? நீங்க என்ன காலண்டர் கொடுக்கப் போறீங்களா? சாமி படக் காலண்டராக் கொடுங்க மாமா!... போன வருஷம் சாமி படத்தை நினைச்சுண்டே படிச்சேன். பாஸா யிட்டேன்!

மாமா! அம்மா மார்க்கெட்டிலேயிருந்து தேங்காயே வாங்கிட்டு வர மாட்டேங்கிறாளே? எனக்குத் தேங்காய்த் துவையல் ரொம்பப் பிடிக்கும். கேட்டா விலை ஏறிப் போச்சுன்னு சொல்றா...அப்பளமும் பொரிக்க மாட்டேன் என்கிறாள். கேட்டால் தேங்காய் எண்ணெய் விலை டபுளாயிட்டதாம். இந்தத் தேங்காய்க்கு என்ன கேடு வந்தது?

நல்ல வேளை மாமா! மழை ஒரேயடியாப் பெஞ்சதோ பிழைச்சோம். நாலு மாசத்துக்கு முன்னாலே எல்லாம் சாதாரணமாக் குளிக்கிறதுக்கே தண்ணி இல்லாமே என்ன கஷ்டம் வீட்டிலே! இந்த அம்மா ஒரு டபரா தண்ணியைக் கொடுத்து அவ்வளவுதான்னு சொல்லிடுவா.

போன வருஷம் அப்பாகிட்டே என்னத்தைக் கேட்டாலும் அப்புறம் வாங்கித் தர்றேன், அப்புறம் வாங்கித் தர்றேன்னு சொல்லி, ஏமாத்திண்டே இருந்தார்.

இந்தப் புது வருடத்திலாவது 'இதோ வாங்கித் தர்றேன்'னு சொல்றாரா பார்ப்போம்.

பேட்டி: பட்டினத்தார்

1970க்குப் பூர்ண கும்ப வரவேற்பளிப்போம்.

பூர்ணகும்பத்தைக் கொண்டு வரவேற்பானேன்?

உலகமும் அதிலுள்ள ஸ்தாவர ஜங்கமப் பொருள்களும், சகல ஆத்மாக்களும் ஜலத்திலிருந்து உண்டாகின்றன. மறுபடியும் பிரளய காலத்தில் தண்ணீரிலேயே லயமாகிவிடுகின்றன என்று வேதங்கள் கூறுகின்றன. ஆகையால் ஆதிகர்த்தாவாகிய இறைவனை ஜலத்தின் மூலம் உருவ வழிகாட்டுக் கொணர்வதே பூர்ண கும்பத்தின் உள் அர்த்தம்.

அப்பூர்ணகும்பத்தை மனித உடலாகப் பாவித்து அதில் கடவுளை தியானம், ஜப பிரார்த்தனையின் மூலம் ஆவிர்பவிக்கச் செய்யவே யாகசாலையில் கும்பத்தை வைத்து யாகமும் பூஜைகளும் செய்யப்படுகின்றன.




# பூர்ணகும்பம்

மனித உடலில் இருப்பது போல தோல், நரம்பு, மாமிசம், ரத்தம், எலும்பு இவைகளைப் பிரதிபலிக்க கும்பத்தில் நூல் சுற்றப்படுகிறது. மந்திரங்களில் சக்தி வாய்ந்த பீஜாக்ஷரங்களால் கும்பம் சுத்தி செய்யப்பட்டு ஜலம் நிரப்பி இறைவனை அதில் ஆவாகனம் செய்யப்படுகிறது.

அந்த ஜலம் கொதிருக்க ஏலம், கிராம்பு, ஜாதிக்காய், பச்சை கற்பூரம், குங்குமப்பூ இவை சேர்க்கப்படுகின்றன. அஷ்டலக்ஷ்மிகளின் கடாட்சம் நிறைந்திருக்க, மாவிலை, தேங்காய், மஞ்சள், குங்குமம், பூ, தர்ப்பைக் கூர்ச்சம், ஸ்வர்ணம், அட்சதை ஆகிய எட்டு மங்கலப் பொருட்களால் கும்பம் அலங்கரிக்கப்படுகிறது.

தெய்வீகம் கலந்த வரவேற்புக்காகவே பூர்ண கும்பம் கொடுத்து வரவேற்பது வழக்கமாக இருந்து வருகிறது.

மிகப் பெரியவர்களுக்கும் யோகிகளுக்கும் ஞானிகளுக்கும் மட்டுமே பூர்ண கும்பம் கொடுத்து வரவேற்கும் மரியாதையைச் செய்ய வேண்டும். இத்தகைய மகான்களின் அருளை நமக்கு வழங்குவதாக இருக்கட்டும் என்று எதிர்பார்த்து 1970க்கு பூர்ண கும்ப வரவேற்பு அளிப்போம்.

(ஒரு பேட்டியின் போது தகவல்களைத் தெரிவித்தவர் காலஞ்சென்ற அனந்தராம தீட்சிதர் அவர்கள்) --''நஜன்''

# துணி கிழிந்து போகிறது...



# பிரைட்* பிளாஸ்டிக் சாமான்கள் நீடித்து உழைக்கின்றன





துணியின் இலேசு, உலோகத்தின் உறுதி, கண்ணாடியின் எழில், ஆனால் இவற்றின் குறைபாடுகளற்றது அதுதான் உங்களுக்கான பிளாஸ்டிக். இலேசு, நீடித்த உழைப்பு, வண்ணங்கள், சுத்தம், வசதி, இவையனைத்தையும் உங்களுக்கென அற்புதமாக இணைத்து வழங்குகிறது பிரைட் பிளாஸ்டிக்.

பிரைட் பிளாஸ்டிக்கில் விதவிதமான வகைகள், வகை வகையான பொருட்கள். அளவிலாப் பயனளிக்கும் ஏராளமான சாமான்கள். சீப்புகள், தட்டுகள், சோப்புப் பெட்டிகள், குவளைகள், ஜாடிகள், சாமான் கூடைகள், வாளிகள், பேஸின்கள், டிரேக்கள் இன்னும் பலப்பல.

**பிரைட்*** தான் உங்கள் சரியான தேர்ந்தெடுப்பு!



பிரைட் பிரதர்ஸ் பிரைவேட் லிட்.,
156—ஏ, தார்தேவ் ரோடு,
பம்பாய்-34.

BB.G 117 TM









# சேப்பாக்கம் சோதனைகள்!

சேப்பாக்கத்தில் சோதனை முடிந்தது.

சாதனை செய்து காட்டியவர்கள் ஆஸ்திரேலிய கிரிக்கெட் விளையாட்டு வீரர்கள்.

இரவு முழுதும் பக்கிங்காம் கால்வாய்க் கரையில் நடுக்கும் குளிரையும் பொருட்படுத்தாமல் துணி டேரா அடித்துப் படுத்துக் கிடந்து மைதானத்தின் கதவுகள் திறந்ததும் உள்ளே நுழைந்து வசதியாக இடம் பிடித்தவர்களும், கெஞ்சிக் கதறி டிக்கெட் வாங்கியும், கருப்பு மார்க்கெட்டில் காசை வீசி டிக்கட் வாங்கியும் வந்தவர்களும் அடைந்தது வேதனை. இந்திய கோஷ்டி கைவெட்டும் தூரத்தில் இருந்த வெற்றியைக் கோட்டை விட்டது!

"ஹா" என்று பதினாயிரக் கணக்கான குரல்கள் ஏககாலத்தில் அலைபோல் செவிகளை மோதும்.

மயிரிழையில் பந்தை அடிப்பவர் பிழைத்து விட்டார் என்று பொருள்.

'ஹோ' என்று அதே ஒலி சில நிமிடங்களில் பரவும். பந்து பவுண்டரிக்குப் பறந்துவிட்டது என்று ஊகித்துக் கொள்ளலாம். 'ஹௌ?'

---

படங்கள்: வெங்கடராகவனின் பந்து வீச்சு

சதம் எடுத்த வால்டர்ஸ்

இரண்டு காப்டன்களும் பூவா தலையா போட்டுப் பார்க்க வருகிறார்கள்.

ஆஸ்திரேலிய ஆட்டத்தின் சீருலையைத் தடுத்து நிறுத்திய ரெட்பாத்.

நாற்காலிமேல் காலைப் போட்டு அலட்சியமாக அமர்ந்திருப்பவர் கான்னெலி.

இரண்டாவது இன்னிங்ஸில் வெளுத்து வாங்கிய விசுவநாத்.

ரசிகப் பெருமக்களில் ஒரு பகுதி.

வெங்கட் என்று அன்புடன் அழைக்கப்படும் வெங்கட்ராகவன்.

பிரஸன்னாவின் பந்து வீச்சு பிரமாதம்தான்.

விசுவநாத்துடன் சேர்ந்து ஆடி அமர்க்களப் படுத்தி விட்டார் வாடேகர்.

ஆட்டம் தொடங்க இரண்டு நாள் இருக்கும் போதே டேரா போட்டு நுழைவாயில் எதிரே கியூ நிற்க ஆரம்பித்தனர் ரசிகர்கள். ஆத்தனை ஆர்வம்!

என்று அழுத்தமான அலறலை கேட்கும். பந்து வீசுபவருடன் சேர்ந்து அனைவரும் 'அம்பயரை'ப் பார்த்து என்ன ஆயிற்று என்று கேட்கும் ஒலி அது.

இந்த ஹா, ஹோ, ஹௌ கோஷங்கள் அடிக்கடி எழுந்து கொண்டிருந்தன.

லாரி, ஸ்டாக்போல், சாப்பல், ஷீஹான் ஆகிய நால்வரும் சீக்கிரமே 'அவுட்' ஆன போதிலும் அன்று வால்டர்ஸ் அசையாமல் நின்று விட்டார். சதத்தை முடித்து விட்டுத் தான் அவுட் ஆனார். அவர் அடித்த பந்துகளை ஆரம்ப காலத்தில் பிடிக்காமல் இருந்து இந்திய ஆட்டக்காரர்கள் அவர் சதம் போட உதவினார்கள்.

முதல் நாளன்று காப்டன் பட்டோடிக்குப் பெரிய சோதனையாக விளங்கியது. அவர் அடிக்கடி வழுக்கி விழ நேர்ந்ததுதான்! மொத்தம் ஏழு தடவை அவருக்குத் தரை வழுக்கி விட்டது. ரேடியோவில் நேர்முக வர்ணனையாளர்கள் அவரது காலணியில் ஏதோ குறை இருக்கலாம் என்று கூறினார்கள்.

தேநீர் இடைவேளையில் காங்கிரஸ் இடைக்காலத் தலைவர் திரு சி. சுப்பிரமணியம் பட்டோடி நவாபைப் பெவிலியன் வராந்தாவில் சந்தித்துப் பாராட்டினார்!

பட்டாடி, இண்டிகேட்-சிண்டிகேட் இரண்டில் எந்தப் பக்கம் என்று ஒருவர் தம் நண்பரிடம் கேட்க, அந்த நண்பர் சட்டென்று அழுத்தமாக, 'கிரி-கேட்' என்று நீட்டிச் சொன்னது சுவையாக இருந்தது.

முதல் இன்னிங்ஸில் இஞ்சினீயரும், பட்டோடியும் ஜோடி சேர்ந்தார்கள். வந்தது வரட்டும் என்று நினைத்துக் கொண்டார்களோ என்னவோ, மற்றவர்கள் பயந்து கோட்டை விட்ட மாலட்டின் பந்துகளை விளாச ஆரம்பித்தார்கள். பார்க்கவும் ரம்யமாக இருந்தது. ஞானம் மிகுந்த மிருதங்கக்காரரும் அனுபவம் மிக்க கட வாத்தியக்காரரும் தனி ஆவர்த்தனம் மாறி மாறி வாசிப்பதுபோல் இருந்தது. ஆனால் நான்காம் நாள் இரண்டாவது இன்னிங்ஸில் இந்தக் கடத்தில் விரிசலும், மிருதங்க சாப்பாவில் கிழிசலும் நேர்ந்து விட்டதோ என்று நினைக்கும்படி இருந்ததே!

தொண்ணூற்று ஐந்து 'ரன்'கள் பின்தங்கியிருக்கிறோமே என்ற கவலையை ஓரளவு அன்று மாலையிலேயே இளைஞர் அமர்நாத் போக்கினார். இரண்டாவது முறையாக ஆட வந்த ஆஸ்திரேலியர்கள், ஸ்டாக்போலையும், சாப்பலையும் தம் பந்து வீச்சினால் அவுட் ஆக்கினார்.

ஒரு நாள் ஓய்வுக்குப் பிறகு மூன்றும் நாட்காலை ஆட்டம் பரபரப்புடன் தொடங்கியது.

இரண்டாவது ஓவரிலேயே பிரசன்னா தம்முடைய பிரமாதமான பந்து வீச்சினால், வால்டர்ஸை பெவிலியனுக்கு அனுப்பினார். பிறகு லாரி, ஷீஹான், டேபர் என்று தொடர்ந்து நாலு 'ஓவர்'களில் நான்கு விக்கெட்டுகள்! மைதானத்தில் இருக்கும் பாட்ஸ்மன் யார், பெவிலியனுக்குத் திரும்பியவர் யார் என்பது ரேடியோவில் நேர்முக வர்ணனை சொல்பவர்களுக்குக்கூட குழப்பமாகிச் சோதனை பண்ணும் அளவுக்கு அத்தனை வேகமாக விக்கெட்டுகள் விழுந்தன! ஆஸ்திரேலியர்கள் இந்த நேரத்தில் ஆறு விக்கெட்டுகளை இழந்து இருபத்திநான்கே ஓட்டங்களை எடுத்திருந்தார்கள். கனவிலும் கற்பனை செய்ய முடியாத நெருக்கடி நிலைமை. இந்திய கோஷ்டி ஜெயித்து விட்டது என்றே பலர் முடிவு கட்டி விட்டார்கள்!

இந்த நிலையை மனம் தளராமல் நிதானத்துடன் சமாளித்த பெருமை ரெட்பாத்துக்குச் சேரும். ரெட்பாத் அறுபத்து மூன்று அருமையான ஓட்டங்களைத் தம் பங்குக்கு எடுத்த பிறகுதான் பிரசன்னாவின் பந்து வீச்சுக்கு இலக்காகி அவுட் ஆனார். ரெட்பாத் ஆட்டமிழந்து பெவிலியனுக்குத் திரும்பியபோது அத்தனை ரசிகர்களும் எழுந்து நின்று கர கோஷம் செய்து வரவேற்றார்கள். ஆஸ்திரேலிய ஆட்டத்தின் சீர்குலைவைத் தடுத்து நிறுத்தியவர் அவரே அல்லவா?

இரண்டாவது இன்னிங்ஸில் ஆஸ்திரேலியர்கள் எடுத்த ரன்கள் 153. இவர்களில் ஆறு பேர்களை ஆட்டம் இழக்கச் செய்தவர் பிரசன்னா. இரண்டு இன்னிங்ஸ்களிலும் சேர்த்து, மொத்தம் 174 ரன்களுக்குப் பத்துப் பேர்களை ஆட்டம் இழக்கச் செய்து சிறந்த ஸ்பின் பௌலர் என்று உலகப் புகழ் பெற்றார். அடுத்தபடியாக இரண்டு இன்னிங்ஸ்களிலும் 97 ரன்கள் கொடுத்து ஆறு விக்கெட்களை எடுத்தவர் வெங்கட் என்று அபிமானத்துடன் ரசிகர்களால் அழைக்கப்படும் வெங்கடராகவன். இவர்களின் கடுமையான உழைப்பினால் பலனடையாமல் விழலுக்கு இறைத்த நீராக்கி விட்டது பாரத கோஷ்டி.

இந்திய கோஷ்டி இரண்டாம் முறையாக ஆட வந்தது. வாடேகாரும், விசுவநாதும் ஜோடி சேர்ந்து ஆட ஆரம்பித்தார்கள். நிதானம் அவர்களுக்குத் துணை நின்றது. பந்தின் தராதரத்தை உணர்ந்து தடுக்கவோ, அடிக்கவோ முன்வந்தார்கள். ரசிகர்கள் உள்ளங்களில் நம்பிக்கை துளிர்த்தது. வாடேகர் ஐம்பத்துஐந்து ரன்களில் நின்ற நேரத்தில் லாரி, சட்டென்று பந்து வீசுபவர்களை மாற்றி மெயினைப் பந்து வீசச் செய்யவே வாடேகார் 'அவுட்' ஆகிவிட்டார்.

விசுவநாத்துடன் தொடர்ந்து ஆட வந்தவர் இஞ்சினீயர். பந்தை வீசிய மெக்கன்ஸியின் கைகளுக்கே, நேராகப் பந்தைத் திருப்பி அடித்து ஏதோ பிரசாதம் கொடுப்பது போல் 'காட்ச்' கொடுத்துவிட்டு 'போனமச்சான் திரும்பி வந்தான் பூ மணத்தோடே' என்ற ரீதியில் பெவிலியனுக்குத் திரும்பினார்.

ஆறு விக்கெட்டுகளுக்கு 24 ரன்கள் என்ற நிலையில் ஆஸ்திரேலியர்கள் ' பதற்றப்படவில்லை. ரெட்பாத் நிதானமாக ஆடினார். மூன்று விக்கெட்டுகளுக்கு 114 ரன்கள் என்ற நிலையில் அந்த நிதானம் தேவையில்லை என்று இஞ்சினீயர் நினைத்திருக்கலாம். அவர் அவசரம் மன்னிக்க முடியாத அவசரம்.

அப்புறம் என்ன? மத்தியானத்துக்கு மேல் இண்டி பக்கம் தலைகாட்டப் பலர் விரும்புவார்கள் என்பதால் அனுதாபத்துடன் நடந்து கொள்வது போல் விக்கெட்டுகள் சரிந்தன.

மொத்தம் இருநூற்று நாற்பத்தொன்பது ரன்கள் எடுத்து வெற்றி பெற மூன்று நாட்களுக்கு மேல் அவகாசம் இருந்தது. இல்லாதவை கவனமும் நிதானமும் பொறுமையும்தான்!

ஆஸ்திரேலிய வீரர் மாலட் இந்திய விக்கெட்டுகள் பத்தொன்பதில் (முதல் தடவை போடு ஆடவில்லை) பத்து விக்கெட்டுகளை 144 ரன்கள் கொடுத்து எடுத்திருந்தார்.

நம் பாரத ஆட்டக்காரர்களிடம் திறமை இருக்கிறது. ஆனால் பொறுமை இல்லை. இந்தச் சென்னைப் பந்தயத்தில் இந்தியாவின் பத்தொன்பது விக்கெட்டுகளில் பதினாறு ஆட்டக்காரர்கள் 'காட்ச்'களால் ஆட்டம் இழந்திருக்கிறார்கள். ஒரு ரன் அவுட். இரண்டு பௌல்ட்.

இருந்தும் உதவாமல் சோதனை செய்தது இந்தியர்களின் திறமை. வருவேன் வருவேன் என்று வானிலே ஆராய்ச்சிக்காரர்கள் மூலம் சொல்லிப் பயமுறுத்திக் கடைசி வரை வந்து சோதனை செய்யாமல் இருந்தது மழை !

நம்பிக்கையை விலை பேசியவர்கள் இந்தியர்கள். ஆனால் அதை வாங்கியவர்கள் ஆஸ்திரேலியர்கள்!

கிரிக்கெட் மைதானத்தில் ஏற்பாடுகள் பற்றி ஒரு வார்த்தை. பல்லாயிரக்கணக்கான ரசிகர்களுக்குத் திருப்தி அளிக்கும் வகையில் வசதிகளைச் செய்து தருவது என்பது இலேசான காரியமில்லை.

ஸ்ரீ ஸ்ரீராமும் அவர் நண்பர்களும் சிறப்பாக சகலத்தையும் கவனித்திருந்தார்கள். ஆனாலும் டிபன் பொட்டலக் காகிதங்களையும் காப்பி சாப்பிட்டானதும் பேப்பர் கப்பையும் போட ஆங்காங்கே குப்பைக் கூடைகளை வைத்திருந்தால் அடிக்கடி பெருக்குவதால் கிளம்பும் தூசி பார்வையாளர்களைச் சோதித்திராது என்று மட்டும் கூறத் தோன்றுகிறது.

இந்திய கோஷ்டியில் சிறந்த மட்டை அடிப்பவர், பந்து வீசுபவர், ஃபீல்ட்ஸ்மன் ஆகியவர்களுக்கு சுகின் நிறுவனத்தார். வெள்ளி ஃபிளாஸ்குகள் பரிசாக வழங்கினார்கள். அதோடு ரொக்கப் பரிசாக ஐந்நூறும் அளித்தார்கள். மேலும், அதிகமான டெஸ்ட் வெற்றிகளைப் பெற்ற ஆஸ்திரேலிய கோஷ்டியில் ஒவ்வொருவரும் வெள்ளி மிறுனான ஃபிளாஸ்க் பெற்றனர். சூட்டைக் காக்கும் பிளாஸ்க் பரிசுகள் இந்திய கிரிக்கெட் மேலும் சூடு பிடித்து எதிர்காலத்தில் பல வெற்றிகளைப் பெற உதவட்டும்.

-மேனு

# படித்துப் பாருங்கள்

## நான்கு நாடகங்கள்

அண்ணல் காந்தி நூற்றாண்டு விழாவை முன்னிட்டு, தமிழ் நாடு சங்கீத நாடக சங்கம் 1968-69ம் ஆண்டில் நடத்திய ஓரங்க நாடகப் போட்டியில் பரிசுக்குரியவை எனத் தேர்ந்தெடுக்கப்பட்ட நான்கு நாடகங்களே நூல் வடிவில் வெளிவந்திருக்கின்றன. இந்நான்கு நாடகங்களும், நான்கு விதமாக இருப்பினும் 'புனித மலர்', 'பார்வதிபுரம்' என்ற இரு நாடகங்களும் ஒரே தன்மையனவாய் இருக்கின்றன. இவ்விரண்டிற்கும் அடிப்படையாக அமைந்துள்ள விஷயம் கிராம வாழ்க்கை, விவசாயத்தில் கூட்டுப் பண்ணை முறை. பட்டதாரிகள் கிராமங்களுக்குப் போய்ப் பணி புரிய வேண்டும் என்று மகாத்மா உபதேசித்துள்ளபடி முதல் நாடகத்தில் பி. ஏ. பட்டதாரி அர்ச்சுனனும் இரண்டாவது நாடகத்தில் உயர் படிப்புப் படித்த இளைஞன் முத்தையனும் கிராம சேவை புரிகின்றனர். அர்ச்சுனனின் கூட்டுப் பண்ணை முயற்சிக்கு முட்டுக்கட்டை போடுபவர் மிராசுதார் காமாட்சி சுந்தரம். முத்தையனுக்கு இடையூறு செய்பவர் பண்ணையார் சிதம்பர முதலியார். அர்ச்சுனனுடைய அன்பைப் பெற்றவள் அல்லி. முத்தையனைக் காதலிப்பவள் பண்ணையாரின் ஒரே மகள் செங்கமலம். ஆனால், இக்காதல் விவகாரம் இளைஞர்களின் லட்சியத்துக்குக் குறுக்கே நிற்கவில்லை. இவர்கள் தங்கள் கொள்கைப் பிடிப்பாலும் மன உறுதியாலும் பண்ணையார், மிராசுதார்களின் சூழ்ச்சியை வென்று அவர்களுடைய மனப் போக்கையும் மாற்றித் தங்கள் வழிக்குக் கொண்டு வந்துவிடுகின்றனர்.

மேற்குறித்த கருத்தை மையமாகக் கொண்டு நாடகமாக்கியிருப்பதில் 'பார்வதிபுரம்' ஆசிரியர் உ. ரா. வரதராசன் நல்ல வெற்றி பெற்றிருக்கிறார். 'புனித மலர்' நாடக ஆசிரியர் கே. கண்ணுசாமி பாத்திர அமைப்பிலும் காட்சி அமைப்பிலும் சிறிது கோட்டை விட்டு விடுகிறார். மிராசுதார் கலெக்டராக இருக்கும் தம் மகனிடம் போய் அர்ச்சுனனுக்குத் தரிசு நிலத்தை ஜாரி செய்து தர வேண்டாமெனக் கூறுவதாகவும் நேர்மையுள்ளம் படைத்த கலெக்டர் தந்தை சொல்லைக் கேளாமல் அர்ச்சுனனின் நியாயமான கோரிக்கையை நிறைவேற்றுவதாகவும் காட்சிகள் அமைத்துக் காட்டி உண்டாக்க வேண்டிய உச்ச கட்டத்தை 12வது காட்சியில் கலெக்டர் உரையாடலில் வைத்துச் சுருக்கமாகக் கூறி, உப்புசப்பில்லாமல் செய்து விட்டார். இச்சிறு குறை இல்லாதிருந்தால் இந்நாடகமும் தரமானதாகவே இருக்கும்.

'பெண்ணுரிமை' நாடகம் கே. ஜயலட்சுமி எழுதியது. கதைக் கருவும் கருத்துக்களும் பழைமையாயிருந்தாலும் நாடக அமைப்பும் உரையாடலும் நன்றாயிருக்கின்றன. தாம் பெண் என்பதால், பெண்ணுரிமை குறித்துச் சிறிது அதிகமாகவே பேசியிருக்கிறார். குடும்பக் கட்டுப்பாட்டை வற்புறுத்தியுள்ள இவர் இல்லறத்தில் பிரம்மச்சரியம் வகிக்கலாம் என்ற காந்தியடிகள் கருத்தை மனத்திற் கொண்டு, செயற்கை முறைகளைவிட, புலனடக்கத்தால் கட்டுப்படுத்தும் இயற்கை முறை சிறந்தது என உணர்த்தியிருப்பது பாராட்டத்தக்கது.

'தீயதைப் பார்க்காதே! தீயதைக் கேளாதே! தீயதைப் பேசாதே!' என்று மூன்று சிறிய அறிவுரைகளின் சின்னங்களாக அமைந்துள்ள மூன்று குரங்கு பொம்மைகளை மகாத்மா தம்மிடம் வைத்திருந்த தத்துவத்தை விளக்கும் வகையில் குடியானவ தம்பதிகள் இருவரைப் பாத்திரங்களாக வைத்துக் கல்வி கோபாலகிருஷ்ணன் 'மூன்று நெறிகள்' என்ற நாடகத்தை ஆக்கியிருக்கிறார். இந்நாடகத்தை நடிப்போருக்கு நல்ல குறிப்புக்களும் விளக்கங்களும் தரப்பட்டிருக்கின்றன. ஆனால் குடியானவ தம்பதிகள் பேசும் பேச்சுக்கள் இயற்கையாயில்லை. கிராமிய வசனங்களைச் சரியாகச் சொல்ல முடியாமல் கொச்சையாக்கியிருக்கிற ஒரு சிறு குறையைத் தவிர இந்நாடகம் பல வகையிலும் சிறப்பாயிருக்கிறது.

சிறந்த நாடக ஆசிரியரான எஸ். டி. சுந்தரம் சங்கச் செயலாளர் என்ற முறையில் எழுதியுள்ள முன்னுரை தமிழ் நாடக வளர்ச்சி குறித்து ஒரு சிறு கோடி காட்டி விவரித்திருக்கிறது.

இருநூறு பக்கங்கள் உள்ள இந்நூலுக்கு விலை என்னவென்று தெரிவிக்கப்படவில்லை.

கிடைக்குமிடம் : தமிழ் நாடு சங்கீத நாடக சங்கம், கிரீன்வேஸ் சாலை, சென்னை—28. —துரை

## CTC* டஸ்ட் டீ தரமான தேநீரின் சுவையையும் அழுத்தமான தேநீர் சத்தையும் அளிக்கிறது

# சூப்பர் டஸ்ட் கிடைப்பவற்றுள் மிகச்சிறந்த CTC டஸ்ட் டீ

## ப்ரூக் பாண்ட் நிபுணர்களால் பக்குவம் செய்யப்பட்டிருப்பதே அது சிறந்து விளங்கக்காரணம்




★கிரஷ், டியர், கர்ல் — இந்த தனிப்பட்ட டீ தயாரிக்கும் முறையானது விரைவில் கரையவும், மிகுந்த தேயிலைச்சத்துக் கிடைக்கவும் உறுதியளிக்கிறது.

# சாருலதா

கி.ராஜேந்திரன்



## அத்தியாயம் 17

## உடைந்த காதலன்

அழகான வண்ணப் பூச் சித்திரங்களுடன் கூடிய கண்ணாடி டம்ளர்களில் ஆரஞ்சுப் பழ ரசம் வழங்கப்பட்டது, சாருலதாவுக்கும் வேணுகோபாலுக்கும். போல் ஸ்டார் உணவு விடுதியின் ஒரு மூலையில் அமர்ந்து அவர்கள் அதை ருசி பார்த்தார்கள்.

சற்றுத் தள்ளி, அவர்களுக்குத் தங்கள் முதுகைக் காட்டிக் கொண்டு, இரு இளம் காதலர்கள் கொக்கோ கோலாவை உறிஞ்சிக் கொண்டிருந்தனர். அதை அவர்கள் அருந்திய விதம் விசித்திரமாக இருந்தது. ஒரு கப் வெனில்லா ஐஸ்கிரீமும் கொண்டு வரச் சொல்லி அதை இருவரும் மாறி மாறி மர ஸ்பூனினால் வழித்தெடுத்து, கொக்கோ கோலா பாட்டில்களுக்குள் ஸ்ட்ராவின் உதவியுடன் செலுத்தினார்கள். கொக்கோ கோலா நுரைத்துப் பொங்கிக் கொண்டு வந்தது. அது அடங்கும் வரை காத்திருந்து மறுபடியும் ஐஸ்கிரீமை உள்ளே திணித்தார்கள். ஒரு வழியாக ஐஸ்கிரீம் கப் காலியான பிறகு ஒருவர் முழங்கையுடன் மற்றொருவரது முழங்கையைக் கொக்கி போட்டது போல் மாட்டி இழுத்துக் கொண்டு அந்தக் கரங்களினாலேயே பாட்டில்களைப் பற்றி, பானத்தை ஸ்டிரா மூலம் உறிஞ்சினார்கள். இடையிடையே 'களுக்'குச் சிரிப்பும் 'கிசுகிசு'த்த பேச்சும் அமர்க்களப்பட்டன.

அந்த ரெஸ்டாரெண்டில் இருந்த அனைவரது கண்களும் அவர்களையே நோக்கின. ஆனால் அவர்கள் யாரையும் லட்சியம் பண்ணவில்லை. இரண்டு ரூபாய் செலவில் அந்த 'ஏர் கண்டிஷண்ட்' உணவு விடுதியில் இரண்டு மணி நேரம் உட்கார்ந்திருந்து இரண்டாயிரத்துக்குக் குறையாமல் அன்பு மொழிகளைப் பேசித் தீர்த்து விடுவது என்று தீர்மானித்து விட்டவர்கள் போல் அவர்கள் நடந்து கொண்டார்கள்.

சாருலதா அவர்களை அருவருப்புடன் பார்த்தாள். டாக்டர் வேணுகோபால் சொன்னான்: ''அவர்களுக்கு இந்தச் சூழ்நிலையே மறந்து போயிருக்கும்; உலகமே அவர்கள் உணர்விலிருந்து கழன்று கொண்டிருக்கும் !''

''பாஸிடிவ்லி இன்டீஸண்ட்'' என்றாள் சாருலதா. ''பொது இடத்தில் இப்படியா நடந்து கொள்வார்கள்?''

''அவர்கள் பேரில் தப்பில்லை சாரு; அவர்கள் காதல் வயப்பட்டிருக்கிறார்கள்.''

''காதலிக்கட்டுமே, யார் வேண்டாம் என்கிறார்கள்? அதற்காக இப்படியா?....''

''ரொம்பக் கௌரவமாக வாழ்க்கை நடத்துவோர்கூடக் காதலில் கட்டுண்டால் கும்மாளம் போடுவார்கள், குழந்தைத்தனமாக. காதல் அத்தகைய அபார சக்தி வாய்ந்ததுதான் !''

''அழகாய்த்தான் இருக்கிறது! அடுத்தாற்போல் தமிழ்த் திரைப்படங்களில் காதலனும் காதலியும் 'டூயெட்' பாடியபடி ஓடிப் பிடித்து விளையாடுவதுகூட இயற்கையாகத்தான் இருக்கிறது என்பீர்கள் போலிருக்கிறதே !''

''பல படங்களில் அதே போன்ற காட்சி திரும்பத் திரும்ப வருவதாலும் மிகைப்படுத்தப்படுவதாலும் நமக்குப் பிடிக்கவில்லை. இரண்டு பேர் கருத்தொருமித்துக் காதல் வயப்பட்டால் எப்படி இருக்கும் என்பது உனக்கும் தெரியாது, எனக்கும் தெரியாது. நமக்கு அதைப் பற்றிய உண்மை அநுபவம் இல்லாத போது பிறரைக் குற்றம் சொல்வானேன் ?''

''இதோ, இவர்களைப் போல் அசிங்கமாக நடந்து கொள்வதுதான் காதல் என்றால் எனக்கு அது வேண்டவே வேண்டாம் !''

''அசிங்கம் என்பது மனத்துக்கு மனம் வேறுபடக்கூடிய விஷயம் சாரு. மாடர்ன் ஆர்ட் ஒன்றை ஒருவன் அசிங்கம் என்று ஒதுக்கித் தள்ளுகிறான்; அதையே வேறொருவன் ஆயிரம் ரூபாய் கொடுத்து வாங்கிப் போகிறான். பல ஆடவர்களை நீ பார்ட்டிக்கு அழைத்து உன் கையாலேயே மது வழங்குகிறாய். அதை அசிங்கம் என்று



நான் கருதுகிறேன்; ஆனால் அதை நீ சர்வ சாதாரண விஷயமாக நினைக்கிறாய்!''

''அப்பா, காத்திருந்து, காத்திருந்து இன்றைக்கு என்னை வகையாக மடக்கி விட்டீர்கள்! 'ஹாண்ட்ஸ் அப்' சொல்லுங்கள்!'' சரணாகதி அடைந்து விட்ட பாவனையில் கரங்களை உயர்த்தினாள் சாரு, விளையாட்டாக.

''வார்த்தைகளால் உன்னை மடக்கி விடுவதில் எனக்குத் திருப்தியில்லை; உன் மனத்தை அறிந்து கொள்ளும் போதுதான் எனக்கு வெற்றி. இப்போது கொஞ்சம் புரிகிறது.''

''என்னவென்று?''

''இவ்வளவு அல்ட்ரா மாடர்னாக இருக்கும் நீ, இந்த நவயுகக் காதலர்களைக் கண்டு ஏன் முகம் சுளிக்கிறாய்? அவர்களுடைய நடத்தையை நீ வெறுக்கவில்லை. அவர்களிடையே நிலவும் காதலை உன்னால் பொறுக்க முடியாதது தான் காரணம்!''

''உண்மைதான், காதல் என்ற வார்த்தையையே எனக்குக் கேட்கப் பிடிக்கவில்லை.''

சாருலதாவின் கண்கள் மேஜை மேலிருந்த கண்ணாடி டம்ளரில் நிரம்பி இருந்த ஆரஞ்சுப் பழ ரசத்தில் நிலைக் குத்தி நின்றன.

''அது ஏன் சாரு? காதல் புனிதமானது, தெய்விகமானது என்று நம்ப நீ ஏன் மறுக்கிறாய்?''

''காதல் தெய்விகமானதாக இருந்தால் அந்தக் கடிதம் கிழிந்திருக்காது.'' — அவள் எங்கோ சென்று ஏதோ நினைவாகப் பேசினாள். அவளுடைய அந்த 'மூட்' கலையாதவிதமாக வேணு கேட்டான்: ''யார் எழுதிய கடிதம்?''

''நான் தான்.''

''யாருக்கு எழுதினாய்?''

''என் காதலனுக்கு!''

வேணுகோபால் தனக்கு ஏற்பட்ட அதிர்ச்சியை ரொம்பக் கஷ்டப்பட்டு அடக்கிக் கொண்டான்.

''யார் அந்த அதிர்ஷ்டசாலி?''



''அவன் இப்போது இல்லே; உடைந்து விட்டான்!''

விண்ணென்று தெறித்த இடத்தில் இதமாக ஒத்தடம் கொடுத்ததுபோல் இருந்தது, வேணுகோபாலுக்கு. ''இறந்து விட்டான் என்று சொல்லு.''

'' இறக்க வில்லே; உடைந்துதான் போய் விட்டான்.'' — சாருலதாவின் குரல் நடுங்கியது. உடல் விறைத்துக் கொண்டது. இந்த மாற்றங்களேக் கவனித்த வேணு, மேலே தொடர்வது உசிதமா என்று ஒரு கணம் டாக்டர் என்ற முறையில் தயங்கினன். ஆனல் புதிரை விடுவித்துவிடும் ஆசை கொண்ட மனிதனே வெற்றி பெற்ருன்.

''ஐயோ, பாவம்! யார் அவனே உடைத்து விட்டார்கள் சாரு?''

அவள் கண்கள் பழ ரசத்தின் மேல் பரப்பிலிருந்து இன்னமும் விடுபட வில்லே. அதைத் திரையாகக் கொண்டு என்னென்ன காட்சிகளே மனத்திலிருந்து பிரதிபலிக்கச் செய்து காண்கிருளோ? அவற்றைத் தானும் பார்க்க வேண்டும் என்ற ஆவல் துடிப்பு வேணுகோபாலுக்குக் கட்டுக் கடங்காமல் பெருகிற்று.

''சொல்லு சாரு, யார் உடைத்தார்கள் அவனே?'' அனுதாபக் குரலில் அவன் வற்புறுத்தினன்.

''நானேதான்! தரையில் அடித்து நொறுக்கிப் பொடிப் பொடியாக்கி விட்டேன்! அப்போது என் கையில் பட்ட பலத்த காயத்தின் தழும்புகூட இன்னும் மறையவில்லே.'' சாருலதாவின் கண்கள் கலங்கின; கண்ணீர் முத்துக்கள் திரண்டன.

காயத் தழும்பைக் காட்டச் சொல்லி வேணுகோபால் கேட்கவில்லே. நினைவுக் குவியல்களிலிருந்து சாருலதாவை அவன் சுயநலத்துடன் விடுவிக்காமலேயே விட்டான்; மூழ்கவே அனுமதித்தான்.

''அந்தக் காதலனின் பெயர் என்ன சாரு?''

''கிருஷ்ணன்!''

வேணுகோபாலின் நெஞ்சம் நெகிழ்ந்தது. ''அழகான கண்ணன்... மயில் பீலி... குழலூதும் கரங்கள்....''

''பட்டுப் பீதாம்பரம் அணிந்த பளபளப்பான உடம்பு, இலேசாகப் பம்மிய வயிறு, கதுப்புக் கன்னங்கள், மயக்கும் கண்கள்.... கொள்ளே அழகு அவன்!''

''இந்த ராதை அந்தக் கண்ணனுக்கு என்ன கடிதம் எழுதினுள்?''

''ராதை கண்ணனுக்கு என்ன எழுதுவாள்? காதல் கடிதம்தான்!

# உடல் தேய...

ஒவ்வொரு நிமிடமும்
உழைப்பிலே செலவழிகிறது
அவள் உள்ளடங்கிய க்ளூகோஸ்!





**களைப்பு என்றால் உங்கள் உடம்பு
க்ளூகோஸுக்காக ஏங்குகிறது என்றே
பொருள். சக்தியைக் கணநேரத்தில்
மீட்டுத் தருகிறது தூய க்ளூகோஸ்
பவுடராகிய க்ளாக்ஸோஸ்-D**

நம் உடம்பிலே சக்தியைத் தோற்றுவிக்கும் 'மூலதனம்'
க்ளூகோஸ். களைப்பு மேலிடும்போது க்ளூகோஸ்
சாப்பிட்டீர்களானால் தெம்பு மீளும். பால், பழச் சாறுகள், குடிநீர்
ஆகியவற்றுடன் சேர்த்தோ, நேரடியாகவோ உண்பதற்கு
உகந்தது க்ளாக்ஸோஸ்-D. மறவாதீர்கள், யாவரும் விரும்புவது
இன்சுவையுள்ள க்ளாக்ஸோஸ்-D.

உடனடியான சக்தி பெற, ஒருசில காசுகளே செலவு!




## க்ளாக்ஸோஸ்-D

க்ளாக்ஸோவின் க்ளூகோஸ் பவுடர்.

dCA-GL 4a tam

வார்த்தை வார்த்தையாக யோசித்து, உருகி உருகி எழுதினாள். நாலு நாள் ஆயிற்று. அதை முடித்துக் கையெழுத்துப் போட... முத்து முத்தான எழுத்துக்களில் அவனுக்கு முத்தம் தந்தாள். சொல் மலர்களால் மாலை கட்டி அணிவித்தாள். எண்ணங்களைத் தன் வடிவமாக்கி அவனைத் தழுவி மகிழ்ந்தாள். தன் கண் வீச்சிலே அவனை யோகிக்கச் செய்தாள் — ஊடல் புரிந்தாள்—சரணகதி அடைந்தாள்; இன்பத்தின் எல்லையைக் கண்டாள்....''

'' அந்தக் கடிதம்.... அது... என்னவாயிற்று சாரு '' என்று வேணுகோபால் கேட்டு முடிக்கவில்லை; அதற்கு முன்னால் சாருலதாவின் மேனி ஒரேயடியாக நடுங்க ஆரம்பித்து விட்டது. கண்கள் செருகிக் கொண்டன. தலையை அவள் இப்படியும் அப்படியுமாக விகாரமாக ஆட்டினாள். ''கிழிக்காதீங்கோ, மாமா! ப்ளீஸ்! கிழிக்காதீங்கோ! நான் இனிமேல் எழுத மாட்டேன் மாமா! அதைத் திருப்பித் தந்துடுங்கோ மாமா! உங்களுக்குக் கோடிப் புண்ணியம்! திருப்பித் தந்துடுங்கோ!.....''

'வீல்' என்று பெருந் தூரத்துடன் கூடிய ஒரு சத்தம்! நல்ல வேளை சாருலதா இதயம் வெடிக்கு முன்னர் மூர்ச்சை அடைந்து விட்டாள். அதிர்ஷ்டசாலி!

விநாடி நேரத்தில் கூட்டம் கூடி விட்டது. ''என்ன? என்ன?'' என்றார்கள் எல்லாரும்.

''மயக்கம்தான்; விலகி இருங்கள்.. நிமிஷ நேரத்தில் சரியாகி விடும்'' என்றான் வேணுகோபால்.

''யாராவது டாக்டருக்கு ஃபோன் செய்யுமாறு ஹோட்டல் மானேஜருக்குச்சொல்லுங்களேன்'' என்றார் ஒருவர்.

''அவசியமில்லை; நானே டாக்டர் தான். கவலைப்படாமல் உங்கள் காரியத்தைக் கவனியுங்கள்'' என்றான் வேணுகோபால். சாருலதாவைத் தன் தோளில் சாத்திக் கொண்டு கைக்குட்டையை மேஜை மீதிருந்த குடி நீரில் நனைத்துப் பிழிந்து அவள் முகத்தை ஒற்றினான்.

''என்ன ஆயிற்று? என்ன நடந்தது?'' என்றாள் சாருலதா கண் விழித்து.

ஐந்து ரூபாய் நோட்டு ஒன்றை மேஜை மேல் வைத்து விட்டுச் சில்லறைக்குக் காத்திராமல் எழுந்தான் வேணு. சாருலதாவை மெல்லப் பற்றி ஆதரவாக அணைத்தபடி காருக்கு அழைத்துச் சென்றான்.

'சாரு? உன் உடலை இப்போது அணைக்க முடிவது போல் புண்பட்ட

## தபால் "தலை"சிறந்த கிரிக்கெட்



மேற்கிந்தியத் தீவுகளுக்குக் கிரிக்கெட் விளையாட்டில் எவ்வளவு அபிமானம் பாருங்கள்! கிரிக்கெட் விளையாட்டிற்கு மதிப்புத் தெரிவிக்கும் வகையில் தபால் தலைகள் வெளியிட்டுள்ளனர்.

படம், செய்தி: ப்ளேஃபேர்
அனுப்பியவர்: 'கேவிகேஎம்'

உன் உள்ளத்தை என்னால் அணைத்து ஆறுதல் கூற முடியுமானால் எவ்வளவு நன்றாக இருக்கும்' என்று நினைத்துக் கொண்டான் வேணுகோபால். 'புண்பட்ட மனத்தில் பழைய நினைவுகள் புழுதியாகப் படிந்து புரையோடிப் போகச் செய்து விட்டிருக்கின்றனவே. நான் டாக்டராக இருந்து என்ன பயன், அதற்கு மருந்து கொடுத்து ஆற்ற முடியாது போனால்?'

டிரைவர் ஸீட்டில், தன் காரில் அமரப் போனாள் சாருலதா. ''நீ கார் ஓட்டக் கூடிய நிலையில் இல்லை சாரு. சொன்னதைக் கேள். நான் உன்னை வீட்டில் கொண்டு போய் விட்டு விட்டு டாக்ஸியில் திரும்பி வந்து என் காரை எடுத்துக் கொள்கிறேன்'' என்றான் வேணுகோபால்.

பலவீனமுற்றிருந்த அவள் பதில் பேசாமல் இடதுபுறம் நகர்ந்துகொண்டாள். வேணு ஓட்ட, கார் பீச் சாலையை நோக்கிச் சென்றது.

''எக்ஸ்கியூஸ் மீ, வேணு! உங்களுக்கு ரொம்பச் சங்கடமாகப் போயிருக்கும். நாலு பேர் மத்தியில்....''

''எனக்கு ஒரு சிரமமுமில்லை. மயக்கமடைந்த நோயாளியை நான் இப்போதுதானா முதல் தடவையாகப் பார்க்கிறேன்!''

''என்னவோ ஒரேயடியாகத் தலையைச்சுற்றிக் கொண்டு வந்தது. நான் ஏதாவது உளறினேனா என்ன?''

''இல்லையே, உண்மைகளைத்தான் சொன்னாய்!''

''எனக்கு மூளையே இன்று சரியாக இயங்க வில்லை; ஒரே குழப்பமாக இருந்தது வேணு!''

''அறிவு ஸ்டிரைக் செய்யும் போது தான் இதயம் பேசுகிறது! சுய அறி

வுடன் இருந்திருந்தால் இதையெல்லாம் நீ சொல்லி இருக்க மாட்டாய். மனத்துக்குள்ளேயே அடைத்து வைத்துத் திணறிக் கொண்டிருப்பாய்.''

''நான் என்ன சொன்னேன் ?''

''உன் வாழ்க்கையில் நடந்த, அழகாக ஆரம்பித்துத் துயரமாக முடிந்த ஒரு கதையைச் சொன்னாய்! காதல் என்றால் என்ன என்பது புரிந்தும் புரியாமலும் இருக்கிற ஒரு வயது. மென்மையான காதல் உணர்வுகள் மனத்தில் பூக்கின்றன. அப்போது நீ மாயக் கண்ணன் பொம்மையைத்தான் வைத்து விளையாடிக் கொண்டிருந்தாய்.''

''என்னிடம் இருந்த ஒரே பொம்மை அதுதான் !''

''கண்ணன் — ராதை பற்றிய கதைகளைப் படித்ததாலோ கேட்டதாலோ உன்னுடைய காதல் உணர்வுகளும் கண்ணனிடமே திரும்பியிருந்தன. பன்னிரண்டு வயதுப் பெண்....''

''பதின்மூன்று'' என்று திருத்தினாள் சாருலதா.

வேணுகோபால் தொடர்ந்தான் : ''உன்னையே ராதையாகப் பாவித்துக் கொண்டு காதல் ரசம் சொட்டச் சொட்டக் காவியக் கடிதம் ஒன்று எழுதினாய். பரம ரகசியமாக அதை வைத்துக் கொண்டு பல நாள் பாடுபட்டுச் சிறுகச் சிறுக யோசித்து எழுதினாய். அடித்துத் திருத்தி எழுதிய கடிதம் முழுமை பெற்று மறு பிரதி எடுத்த தறுவாயில் மாமன் உருவத்தில் ஒரு முரடன், மனித உருவில் ஓர் அரக்கன் வந்தான். மென்மையான உணர்வுகளுக்கு மதிப்பு அளிக்கத் தெரியாத அந்த மடையன் அந்தக் கடிதத்தைப் படித்துவிட்டு ஓஹோஹோ என்று பரிகாசமாகச் சிரித்தான்.''

''சிரித்து விட்டுப் போனாலும் தேவலாமே ! என்னைக் கேலி செய்ய வேண்டும் என்பதற்காக நாலுபேரைக் கூப்பிட்டு உட்காரச் சொல்லி அந்தக் கடிதத்தை எல்லாருக்கும் கேட்க உரக்கப் படித்தான்.'' — சாருலதா விம்மினாள்.

''சாரு! சாரு! அமைதியாக இருக்க வேண்டும் நீ !''

வேணுகோபால் காரைச் சாலை ஓரமாக நிறுத்தினான். ''என்றோ நடந்து போன விஷயம். ஏன் மனத்தைக் கஷ்டப்படுத்திக் கொள்கிறாய் ?''

''என்றோ நிகழ்ந்த எத்தனையோ பல சம்பவங்களை நினைவில் வைத்துக் கொண்டிருக்கிறோமா, வேணு ? வைத்துக் கொள்ளத்தான் முடியுமா? அந்த ராட்சதன் அன்று என்ன சொன்னான் தெரியுமா? 'முழ நீளம் உயர்வதற்குள்ளே காதல் ! காலம் கெட்டுப் போச்சு' என்று சொல்லி, படித்து முடித்த பிறகு அந்தக் கடிதத்தைச் சுக்குநூறாகக் கிழித்துத் துகள்களைப் பறக்க விட்டான். சுற்றிலுமிருந்தவர்களில் ஒருவராவது வாய் திறக்க வேண்டுமே ? கிடையாது! எனக்கு ஆத்திரம் கட்டுக்கடங்காமல் பெருகியது. மாமனை அடிக்கப் போனேன். 'ஏய்! பெரியவங்ககிட்டே கைமிஞ்சப் படாது' என்று என்னைத்தான் கண்டித்தார் அப்பா. மாமா சாண்டோ போல இருப்பான். அடிக்க வந்த என் கரங்களைக் கெட்டியாகப் பிடித்துக் கொண்டு என்னால் நகர முடியாதபடி செய்தான். 'மாமாகிட்டே கோவிச்சுக்கலாமா கண்ணு ! எங்கே ஒரு முத்தம் கொடு!' என்றான். வயதான தைரியத்தில் அவன் அப்படிப் பேசினான். சூழ்ந்திருப்பவர்களும் மாமன் மருமகளைக் கொஞ்சுவதாகத்தான் எடுத்துக் கொண்டார்கள். ஆனால் அவன் பாசத்துடன் என்னை நெருங்கவில்லை. பண்பு கெட்டுத்தான் அணுகினான் என்பது எனக்கு நன்றாகப் புரிந்தது. க்ஷவரம் செய்யப்படாத அந்த முகம் என் கன்னத்தில் உரசியது. எனக்கு அருவருப்பில் வயிற்றைக் குமட்டியது. முத்தம் தர நான் மறுக்கவே, 'பச்சைப் பிள்ளைங்களுக்குக்கூட இந்தக் காலத்திலே வெட்கம்' என்று சொல்லிக் கொண்டே என்னைக் கட்டிப் பிடித்து முத்தமிட்டான் அவன்.'' சாருலதா அருவருப்புடன் உடலைச் சிலிர்த்துக் கொண்டாள்.

''இப்படித்தான் சில மனிதர்கள் முட்டாள்தனமாக நடந்து கொள்கிறார்கள். கோமளமான ஓர் இதயத்தைப் புரிந்து கொண்டு பரிவுகாட்டுவதற்குப் பதில் அதைக் கசக்கிப் போட்டு விடுகிறார்கள். அசுரத்தனமாக நடந்து கொள்கிற அரை நிமிஷத்தில் அந்தக் குமரியின் எதிர்காலத்தையே பாழடித்து விடுகிறோம் என்பதை அவர்கள் தெரிந்து கொள்வதேயில்லை. அந்த ஒரு நிகழ்ச்சி காரணமாக எத்தனையோ மனப் போராட்டங்களுக்கு அந்தப் பெண் பிற்காலத்தில் ஈடு கொடுத்துத் தவிக்க நேரிடுகிறது !''

''அந்தக் காமாதுரன் மீது காட்ட வேண்டிய ஆத்திரத்தையெல்லாம் நான் என் அழகான கண்ணன் பொம்மை மீது காட்டினேன். என்னைக் காக்கத் தவறிய காதலனைத் தரையில் அடித்து நொறுக்கி விட்டேன் !''

''ஈ.வெ.ரா. பெரியாருக்குச் சரியான சிஷ்யைதான்'' என்றான் வேணு, அவ

னைத் துயர நினைவுகளிலிருந்து விடுவிக்கும் நோக்கத்தோடு.

கண்ணீர் சிந்தியபடியே சிரித்தாள் சாருலதா. ''குருவுக்கு மிஞ்சிய சிஷ்யை. அவர் இன்று சொல்வதை அன்றே செய்து காட்டியவள்!'' — அவள் தன் இடது உள்ளங் கையைப் பார்த்துக் கொண்டாள். தெரு விளக்கின் ஒளி காருக்குள் மங்கலாகத்தான் வீசியது என்றாலும் தழும்பு தெளிவாகத் தெரிந்தது. ''பொம்மையை உடைத்தபோது காயம் பட்டுப் புரையோடிப் போயிற்று. ஆறுவதற்கு ஒரு மாதம் பிடித்தது.''

வேணுகோபால் வலது ஆள் காட்டி விரலால் அந்தத் தழும்பை மெல்லத் தடவினான். பிறகு கரத்தைப் பின்னுக்கு இழுத்துக் கொள்ளாமல் அந்த உள்ளங்கையிலேயே கிடக்க அனுமதித்தான். அவன் இடக்கரம் கார் ஸீட்டின் முதுகு மேல் நீண்டிருந்தது.

''சாரு! மனத்துக்குள்ளேயே வைத்து வேதனைப்பட்ட ஒரு விஷயத்தை இன்று என்னிடம் சொல்லி விட்டாய். இனி உன் உள்ளம் இலேசாகி விடும். நிம்மதியாக இருக்கலாம் நீ!''

''எனக்கு ஏது நிம்மதி ?'' என்றாள் சாருலதா, இன்னும் பத்து நாட்களில் வந்து நிற்கப் போகிற மஹிபாலையும் சந்திரபாலையும் நினைத்துக் கொண்டு. ''இவ்வளவு தூரம் நான் உங்களிடம் இன்று பேசியதே எனக்கு ஆச்சரியமாக இருக்கிறது.''

''அது உண்மைதான் சாரு. இதை நானும் எதிர்பார்க்கவில்லை. யதேச்சையாக நடந்து விட்டதுதானே இந்த நிகழ்ச்சி? ஆமாம், என்னை எதற்காக போல்ஸ்டார் ரெஸ்டாரெண்டுக்கு வரச் சொன்னாய்? அதை மறந்தே விட்டோமே நாம் ?''

'ஆமாம், எதற்காக வேணுவைச் சந்திக்க விரும்பினேன்?' என்று தன்னைத் தானே கேட்டுக் கொண்டாள் சாருலதா. மனதுக்குள்ளேயே பேசினாள். 'நான் பிளாக் மெயில் செய்யப்படுவதைக் கூறவா ? அதை எவ்வாறு சொல்லி யோசனை கேட்க முடியும்? 'எதற்காக உன்னை பிளாக் மெயில் செய்கிறார்கள்?' என்று வேணு கேட்டால் என்ன பதில் சொல்வது ?'

''சில தினங்களுக்கு முன்னால், நீங்கள் சொன்னீர்கள் அல்லவா, உங்களிடமிருந்து நான் தெய்வ பொறுமை தாக; அது உண்மைதானு என்று பரீட்சித்துப் பார்க்கத்தான் உங்களை ஃபோனில் கூப்பிட்டேன்!''

''பரிசோதனையின் முடிவு?''

''உங்களுக்கு நூற்றுக்கு நூறு மார்க்! இன்று சாயங்காலம் உங்களைச்

இரு வீடுகளில் கொல்லைப்புற கிணறுகள் அருகருகே இருந்தன. தாம்புக் கயிறுகளில் கட்டப்பட்ட வாளிகள் ஒன்றோடொன்று பேசிக் கொண்டன.



''என்னைத் தண்ணீரால் நிரப்பியவுடனேயே தண்ணீரை எடுத்துக் கொண்டு காலி செய்துவிடுவார்களே என்று வருந்துகிறேன்'' என்றது முதல் வாளி.

''காலி செய்வது மீண்டும் நிரப்புவதற்காகத்தானே என்று நான் சந்தோஷமல்லவோ அடைகிறேன்'' என்றது இரண்டாம் வாளி. — மணி

---

சந்தித்துப் பேசலாம் என்பது உறுதியானதும் மேஜை மேல் மலையாகக் குவிந்திருந்த வேலைகளை விடுவிடு என்று முடித்து விட்டேன். சோர்வெல்லாம் இருந்த இடம் தெரியாமல் ஓடி விட்டது.''

''அப்படியானால் நாளைக்கு கன்சல்டிங் ஃபீஸ் கோரி உனக்கு ஒரு பில் அனுப்பி வைக்க வேண்டியதுதான் '' என்று கூறியபடியே காரைக் கிளப்பினான் வேணு. அவளது உள்ளங் கைத் தழும்பை ஸ்பரிசித்துக் கொண்டிருந்த தன் வலது கரத்தை நீக்கி அந்தக் கரத்தாலேயே ஸ்விட்சைப் போட்டு இஞ்சினையும் இயக்கிக் காரைச் செலுத்தினான். இடது கரம் பின்புறம், சாருலதாவின் சிரத்தைத் தாங்கிக் கொண்டிருந்தது இப்போது.

''எதற்கு பில்? தண்ணீரை அள்ளி முகத்தில் தெளித்ததற்கா? ஒரு மருந்து கூட எழுதித் தரவில்லை; டாக்டர் ஃபீஸ் வேறு ? நான் ஒன்றும் அவ்வளவு ஏமாந்தவளல்ல !'' — பேசுகையில் அவளுக்கு இமைகள் கனத்தன; நாக் குளறியது; தலை சாய்ந்தது.

''மருந்துச் சீட்டு எதற்கு? நானே தான் உனக்கு டானிக்காகப் பயன் படுகிறேன் என்று நீயே ஒப்புக் கொண்டு விட்டாயே சாரு !''

இதற்குப் பதிலாகச் சாருலதாவிடமிருந்து ஒரு நீண்ட பெருமூச்சுத்தான் பிறந்தது. ஆடி விழுந்த அவள் தலை அவன் தோளில் ஒண்டிக் கொண்டது. வேணு சாலையிலிருந்து பார்வையைத் திருப்பி ஒரு கணம் அவள் முகத்தைப் பார்த்தான். அவள் மனத்துக்கு இன்று ஏற்பட்டிருந்த சிரமங்கள் காரணமாக அவள் சோர்வுற்று, இப்போது ஏதோ பாதுகாப்பு பெற்று விட்டதுபோலக் கவலையின்றிக் குழந்தையாகத் தூங்கிக் கொண்டிருந்தாள்.

வேணு மென்னகை புரிந்து காரை மெதுவாகவே ஓட்டி, அந்த இனிய நேரத்தைத் தன்னால் ஆனவரை நீடிக்கச் செய்தான். (தொடரும்)


MIXED
VEGETABLE
PICKLE
T.S.R.&Co.
LIME
PICKLE
T.S.R.&Co.
T.S.R.&Co.
சுவைத்திடுவீர்
டி.எஸ்.ஆர்
ஊறுகாய் !
கண்டிடுவீர்
அதன்
இணையற்ற
ருசியினை !
எலுமிச்சை, வடு மாங்காய்,
மாங்காய், வெள்ளைப் பூண்டு
வெங்காயம் ஊறுகாய்கள் &
கோகுல் கறி பவுடர்
டி. எஸ். ஆர். & கோ.,
கும்பகோணம்
மதராஸ்-16.
Criterion TSR 3122

# நல்ல அம்மா, நல்ல பெண்!

அன்னம்

இரவு நலங்கு முடிந்து அவரவர்கள் உறங்கப் போய் விட்டார்கள்.

சமையற்காரர்கள் பாத்திரங்களை ஒழித்து முற்றத்தில் போட்டு விட்டார்கள். வாசலில் கூப்பாடு போட்டுக் கொண்டிருந்த குறக் கூட்டம், கிடைத்ததை எடுத்துக் கொண்டு நகர்ந்து விட்டது. அவசரத்துக்காக வாங்கி வைத்திருந்த காஸ் லைட்டுகளில் இரண்டைத் தவிர மற்றவற்றை அணைத்து விட்டான் கம்பெனியிலிருந்து வந்தவன். மாடியில் ஒரு மூலையில் சீட்டாடிக் கொண்டிருந்தவர்கள் கூட, சீட்டுக் கட்டைத் தள்ளி வைத்து விட்டு ஆளுக்கொரு பக்கமாகச் சாய்ந்து விட்டார்கள்.

காலையிலிருந்து எனக்குச் சரியான அலைச்சல். அப்பாவினால் இப்போது எதுவுமே செய்ய முடியவில்லை. 'பிரஷர்' அதிகம் இருக்கிறது என்று டாக்டர் சுப்பிரமணியம் சொல்லி விட்டார். அதிகமாக இரைந்து பேசினால் கூடத் தலையைச் சுற்றுகிறது என்று ஒதுங்கி விடுவார்.

கல்யாணத்தின் மொத்தப் பொறுப்பும் என் தலையில்தான். எத்தனை பணம் எடுத்தேன், எதற்குக் கொடுத்தேன் என்று எனக்குச் சரியாகத் தெரியாது. நாளைக்கு அப்பா கணக்குக் கேட்கும்போதுதான் சிரமப்படப் போகிறேன்.

என் ஞாபக சக்தியையெல்லாம் திரட்டி அன்று செலவழித்த தொகைக்கு மொத்தமாக ஒரு கணக்கு எடுக்க முயன்றேன். பாக்கி கிட்டத்தட்ட சரியாக இருந்தது. ஒரு ஐம்பது ரூபாய்க்குத்தான் விவரம் தெரியவில்லை. தலையைச் சுற்றியது. இழுத்து மூடி விட்டு நிமிர்ந்தேன். மாடியில் சோபன அறையில் இன்னும் விளக்கு எரிந்து கொண்டிருந்தது.

'உம்.... இன்னும் அவர்கள் தூங்கவில்லை போலிருக்கிறது!' என்று நினைத்துக் கொண்டேன். உள்ளே என் அருமைத் தங்கை காயத்ரி இருக்கிறாள். அவள் அருகே அன்று காலையில் அவள் கைப்பிடித்த எங்கள் மாப்



பின்னே. அவளை ஒரு கொசு கடித்தால்கூடக் கவலைப் படும் நாங்கள் இன்று அதிகம் அறிமுகம் இல் லாத ஒரு மனிதனுக்கு உடைமையாக்கி விட்டிருக் கிறோம்.'

எனக்குச் சிரிப்பு வந் தது. உலகம் தெரியாத பெண் என்று அவளை அடிக்கடி அம்மா சொல் வாள். இப்போது வாழ் வின் முதல் அத்தியாயத்தை அங்கே படித்துக் கொண் டிருக்கிறாள். நாளைக்குக் காலையில் அவளைப் பார்த்துக் கேலி செய்பவர் களுடன் நானும் கலந்துகொள்ள வேண்டும்.



"ஒவ்வொரு கல்லூரியா மூடிட்டு வராங்களே! என்ன இப்படி மூடினீங்க?"
"மாணவர்கள் 'மூட்' சரியில்லே; ஆகவே மூடினார்கள்!"

நாளைக்குக் காலையில் அவளைத் தனியே சந்தித்து ஒரு வார்த்தை பேசக்கூட எனக்குச் சந்தர்ப்பம் கிடைக்குமா? சிரமம்தான்!

காலை எட்டு மணிக்கெல்லாம் சம்பந்தி வீட்டார் திரும்பவும் சென்னைக்குப் புறப்படு கின்றனர். தனியாகப் பஸ் அமர்த்திக் கொண்டு வந்திருந்தார்கள். பாபநாசத்தி லிருந்து சென்னை போவதென்றால் குறைந் தது எட்டு மணி நேரம் ஆகும். அன்று வியாழக்கிழமை. ராகு காலம் ஆரம்பிக்கு முன்னால் சென்னைக்குப் போக வேண்டும் என்று பறந்தனர்.

அப்படியென்றால் நாளைக்குக் காலை எட்டு மணிக்குப் பிறகு காயத்ரியை என்னால் பார்க்க முடியாது. அவள் புதிதாக அறிமுகமானவர் களுடன் எங்களை உதறி விட்டுப் புறப்பட்டுப் போய் விடுவாள்.

என் தொண்டையை அடைத்துக் கொண்டு வந்தது. காயத்ரியின் பெட்டி தயாராக 'பாக்' செய்யப்பட்டுப் பக்கத்தில் இருந்தது. அவசரத்தில் மூடியிருக்கிறாள். புடவைத் தலைப்பு ஒன்று பெட்டியின் வெளியே நீட்டிக் கொண்டிருந்தது. பெட்டியைத் திறந்து அதை உள்ளே தள்ளி வைக்க நினைத்தேன். ஆனால் என் கைகள் கூசின.

காயத்ரியின் பெட்டியை இனி நான் தொட லாமா? அருமைச் சகோதரி எவ்வளவு விலகிப் போய் விட்டாள்? மாப்பிள்ளை தாலிக் கயிற்றைக் கட்டி எவ்வளவு தூரம் இழுத்துக் கொண்டு விட்டார்?

துணிந்து பெட்டியைத் திறந்து துருத்திக் கொண்டிருந்த புடவையைச் சரி செய்தேன். மேலாக நான் காயத்ரிக்கு வாங்கிக் கொடுத்த 'லெடர் பர்ஸ்' இருந்தது. ஊருக்குப் போய்ச் சில நாட்களுக்குத் தேவையான அளவு கார்டு, கவர் முதலியன வாங்கித் தந்திருந்தேன். அதையும் அவள் சரியாக மூடியிருக்கவில்லை. எடுத்து மூட எண்ணியவன் அறியாமல் அதைத் திறந்து பார்த்தேன்.

உள்ளேயிருந்து விழுந்தது என் படம். ஆபீஸில் எனக்கு அடையாளச் சீட்டு வழங்க மூன்று 'பாஸ்போர்ட்' போட்டோ கேட் டிருந்தார்கள். அவர்களுக்குக் கொடுத்த இரண்டு பிரதிகள் போக மூன்றாவது பிரதியை இவள் எடுத்துப் பத்திரப்படுத்திக் கொண் டிருந்தாள்.

என்னைப் பிரிந்து அவள் போகும்போது, என்னை எண்ணும்போதெல்லாம் பார்க்க என் படத்தைக் கொண்டு போகிறாள். என் மேல்தான் எத்தனை பாசம்?

என் காயத்ரி என்றுமே நான்கு வயதுக் குழந்தை யாக இருக்கக் கூடாதா? கவுன் போட்டுக் கொண்டு துள்ளி ஓடித் தன் மழலை மொழியில் எங்களையெல் லாம் மகிழ்வித்துக் கொண் டிருக்கக் கூடாதா? ஏன் அவள் வளர்ந்தாள்? ஏன் அவள் திருமணம் செய்து கொண்டாள்? எங்களையெல்லாம் ஏன் இந்த வேதனையில் ஆழ்த்த வேண்டும்?

அறையின் மூலையில் யாரோ முனகும் ஒலி என் சிந்தனையைக் கலைத்தது. திரும்பித் திரும்பிப் பார்த்தேன். அங்கே என் மனைவி புரண்டு படுத்துக் கொண்டிருந்தாள். இவள் மட்டும் அவள் பெற்றோரை — கூடப் பிறந்த வரைப் பிரிந்து என்னுடன் வந்துவிடவில் லையா? அவர்களையெல்லாம்விட எனக்கு அதிக உரிமை உண்டு என்று நான் நினைக்க வில்லையா? அதேபோல்தான் காயத்ரியும் புக்ககம் போகிறாள் என்பது சரிதான். ஆனா லும் என் மனம் அதை ஏற்க மறுத்தது.

புரண்டு படுத்த சீதா எழுந்து உட் கார்ந்தாள்.

"என்ன பார்க்கிறீர்கள்? இன்னுமா படுக்க வில்லை?" என்று என்னைக் கேட்டாள்.

"இல்லை. எனக்குத் தூக்கம் வரவில்லை."

"எனக்கும்தான். மனத்தில் ஏதோ ஒரு வேதனை!" என்றாள் அவள்.

"வேதனையா?" என்று கேட்டேன் ஒன்றும் புரியாமல்.

"ஆமாம்.... உங்கள் நெஞ்சு கல்நெஞ்சு. யார் இருந்தால் என்ன, யார் போனால் என்ன என்று நினைப்பீர்கள். சத்திரத்திலிருந்து நேராகக் காயத்ரி ஊருக்குப் போய் விடு வாள். நம் வீட்டுக்கு நான் மட்டும் தனி யாகப் போக வேண்டும் என்று நினைக்கும் போது...." அவள் குரல் தழுதழுத்தது.

"நன்றாக இருக்கிறது, நீ சொல்வது. கல் யாணம் முடிந்தபிறகு மாப்பிள்ளையைத் தனி யாக ஊருக்குப் போகச் சொல்ல முடியுமா?" என்று கேட்டேன்.

"என்ன அவசரமாம்? இரண்டு மாதங்கள் கழித்துக் கொண்டு போகட்டுமே!... இல்லே, அவர்தான் இங்கு இருக்கக் கூடாதா? அப்பா வுக்கும் எங்களுக்கும் எதுவும் தெரியவில்லை! எல்லாவற்றுக்கும் 'சரி சரி' என்று தலையை ஆட்டிவிட்டு வந்திருக்கிறீர்கள்!" என்றாள்.

"எல்லாம் தீர்மானமானபிறகு இப்போது என்ன அதைப் பற்றி..." என்றேன்.

"உங்களுக்கு என்ன தெரியும்? கூடப் பிறந்த தங்கை கிடையாது எனக்கு.... மூன்று வருஷங்களுக்கு முன்பு இந்த வீட்டுக்கு நான் வந்தபோது என்னுடன் ஒட்டிக் கொண்ட வள் காயத்ரி. நாத்தனார் மதனி மாதிரி யாகவா பழகினோம்? என்னையே யாரோ

வெட்டிக் கொண்டு போகிறாற் போலிருக்கிறது....'' என்றாள் அவள் கண் கலங்க.

அங்கிருந்து எழுந்தேன். என் கண்களும் குளமாயின. இன்னொரு வீட்டிலிருந்து வந்த சீதாவுக்கே இப்படி நெஞ்சை அடைத்துக் கொண்டு வந்தால் எனக்கு எப்படி இருக்கும்?

வாசற்புறம் வந்தேன். ஒரு தூணில் சாய்ந்தபடி அப்பா உட்கார்ந்திருந்தார்.

''என்னப்பா, தூங்கலையா?'' என்று கேட்டேன். மணி ஒன்று எப்போதோ அடித்து விட்டிருந்தது.

''ஏன்டா! எட்டு மணிக்குப் புறப்பட வேண்டும் என்கிறார்களே! பத்து மணிக்குப் புறப்பட்டால் போதாதா?'' என்றார். அவரும் இதைத்தான் நினைத்துக் கொண்டிருக்கிறார் என்று எனக்குப் புரிந்தது.

''இல்லை! அப்பா! அவர்கள் ஐந்து மணிக்கு அங்கு வரவேற்பு வைத்துக் கொண்டிருக்கிறார்களாம்.....'' என்றேன்.

''மாப்பிள்ளையிடம் தனியாகச் சொல்வதுதானே.... இன்னும் ஒரு வாரம் கழித்துக் காயத்ரியைக் கொண்டு விடுவதாக......''

''அது எப்படி அப்பா?.... நாம் முன்னமே ஒப்புக் கொண்டதை எப்படி இப்போது மாற்றுவது?''

''குழந்தை தனியாகப் பஸ் ஸ்டாண்டுக்குக் கூடப் போனதில்லையேடா..... அவ்வளவு தூரம் தனியாக.....''

''தனியாக என்ன அப்பா, நல்ல துணையோடு — வாழ்க்கைத் துணையோடுதான் அனுப்புகிறோம்!'' என்றேன் நான்.

''உன் மாதிரி அத்தனை திடமாக என்னால் இருக்க முடியவில்லையே!'' என்று நெகிழ்ந்து போனார் என் அப்பா.

''நன்றாக இருக்கிறது. அப்பாவும் பிள்ளையும் பேசுவதற்குச் சரியான நேரம் பார்த்தீர்கள்! கட்டுச்சாதக் கூடைக்குத் தனியாகப் பூசணிக்காய் வைத்திருந்தேன். அதைக் காணோம். காலையில் டிபனுக்குக்கூட இலை போதாது போலிருக்கிறது!'' என்று கூறிக் கொண்டே வந்தாள் அம்மா.

''காலையில் நான்கு மணிக்கெல்லாம் நம்ம கோணத்துக்கு ஆள் அனுப்பிச் சைக்கிளில் வாங்கிக் கொண்டு வரச் சொல்கிறேன், அம்மா!'' என்றேன் நான்.

''சீதா, தூங்குகிறாளா?'' என்று கேட்டாள் அடுத்தபடியாக.

''ஆமாம்'' என்று தலையசைத்தேன்.

''அவளை எழுப்பு. காலையில் நேரம் இருக்கிறதோ, இல்லையோ! காயத்ரியின் பெட்டியைத் திறந்து எல்லாம் சரியாக இருக்கிறதா என்று பார்க்கச் சொல்லு. ஓர் இடத்துக்குப் போனதில்லை. ஒரு துப்பு கிடையாது. எதையாவது மறந்து வைத்து விட்டுப் போய் அங்கே 'கெக்கே, பிக்கே' என்று விழித்துக் கொண்டு நிற்கும்!'' என்று பேசிக் கொண்டே உள்ளே போனாள்.

அம்மாவா இவள்?

பெண் ஊருக்குப் போகிறாள் — தன்னைப் பிரிந்து புக்ககம் போகிறாள் — என்ற எண்ணம் துளியும் இல்லை. சாதாரணமாக யாரோ ஊருக்குப் போவதுபோல் அல்லவா பேசுகிறாள்?

நானும் அம்மாவைப் பின்தொடர்ந்தேன். சீதாவை எழுப்பி விஷயத்தைச் சொன்னேன்.

கட்டுச் சாதக் கூடைக்குத் தேவையானதெல்லாம் சேகரித்துக் கொண்டிருந்தாள் அம்மா. ''மணி நான்கு அடிக்கிறதுக்குள்ளே சமையல் ஆரம்பிக்கணும்.. அப்போதான் ஏழரை மணிக்குத் தயாராக இருக்கும். அந்த நாராயணன் எங்கேயாவது தூங்கிக் கொண்டிருப்பான். போய் எழுப்பு!'' என்று விரட்டினாள்.



பிறக்கும் குழந்தைகள் சாதாரணமாக 7 முதல் 8 பவுண்டு எடைக்குள் இருக்கும். ஆனால் உலகத்திலேயே பெரிய குழந்தை நியூயார்க்கில் 1935ல் பிறந்தது! சாதாரணக் குழந்தைகளைப்போல் மூன்று மடங்கு! —ஆழி

எதையோ தேடி எடுத்தபடி, ''ஏன் அம்மா!.... காயத்ரி ஊருக்குப் போன பிறகு நம் வீடு 'வெறிச்' சோடி விடாதா?'' என்று கேட்டேன்.

''கூடப் பழகினவா யார் போனாலும் அப்படித்தான் இருக்கும். இரண்டு மூன்று நாட்களிலே எல்லாம் சரியாயிடும்....'' என்றாள்.

என்னால் ஒரு கணம் பதில் பேசக்கூட முடியவில்லை.

தொடர்ந்து நான் பல வேலைகளைச் செய்ய வேண்டி வந்தது. ''என்னமோ அம்மா!...நாளைக்குப் பிறகு காயத்ரி நம்மோடு இருக்க மாட்டான்னு நினைக்கிற போதே எனக்கு...எனக்கு'' என்று முடிக்க முடியாமல் திணறினேன் நான்.

''போடா பைத்தியம், ஒருத்தொருத்தி இன்னும் சின்ன வயசிலே கார்த்தூர் காட்மாண்டு'னு தனியாப் போறா. இவள் எங்கே போறா? சென்னைக்குத்தானே?... ஒரு ராத்திரிப் பயணம்....''

அம்மாவுக்கு இத்தனை கலங்காத நெஞ்சமா? என்னாலும் நம்பவே முடியவில்லை.

''அப்படி அடிக்கடி நம்மால் போய்ப் பார்க்க முடியுமா அம்மா?'' என்றேன் நான்.

''ஆசை இருந்தால் போய்த்தான் பார்க்கணும்!'' என்றாள் அவள் பதிலுக்கு.

நாங்கள் இருவருமாகச் சாமான்களை எடுத்து வைத்து முடிக்கும்போது மணி நாலரை. சமையல்கார நாராயணன் கடக் கடக் காப்பியைக் கொண்டு வந்து கொடுத்தான்.

''அம்மா ராத்திரி முழுதும் தூங்கவே இல்லை போலிருக்கே!'' என்று அனுதாபம் தெரிவித்தான்.

''இரண்டும் கெட்டான் பிள்ளையையும், ஒன்றும் தெரியாத பெண்ணையும் பெத்

கார்ன் ப்ராடக்ட்ஸ்
பக்குவமுறைப் போட்டியில்*
பங்கு கொண்டு பரிசு பெறுங்கள்!

எங்கள் விசேஷமான

# பேரிச்சம்பழ-முந்திரி

அனுப்பியவர் : திருமதி ருக்மணி தேவி, பேல்பு,

# பிரவுன் & போல்ஸன்

## ப்ளேவர்டு கார்ன்ப்ளவர் கொண்டு தயாரிக்கப்பட்டது



பிரவுன் & போல்ஸன் ப்ளேவர்டு கார்ன்ப்ளவர் பலவித அல்வாக்களையும், இதர எளிதான புட்டிங்குகள் மற்றும் பழவகைத் தின்பண்டங்களையும் தயாரிக்க உதவுகிறது. குழந்தைகளுக்கும் நோயாளிகளுக்கும் உகந்தது. செழுமையான சத்துள்ளது. அருமையான பொருள்களிலிருந்து மிகுந்த கவனத்துடன் தயாரிக்கப்படும் பிரவுன் & போல்ஸன், கிடைக்கும் ப்ளேவர்டு கார்ன் பவுடர்களுள், சாலச் சிறந்தது.

எல்லா பிரவுன் & போல்ஸன் தயாரிப்புகளும் (கஸ்டர்டு பவுடர் உள்பட) சைவ உணவுக்குக் குந்தகமற்றது. அவை முட்டை கலவாதவை.




ஒவ்வொரு பேக்கெட்டிலும் 5 இனிய சுவைகள்!

தேர்வு:

# புட்டிங்

உச்சிலா போஸ்ட், வைத் கனரா.

## பக்குவ முறை:

1 பேக்கெட் பிரவுன் & போல்ஸன் ப்ளேவர்டு காஸ்ப்ளவர் (ஏதாவது ஒரு சுவை)
2 டீஸ்பூன் (கும்பமாக) பிரவுன் & போல்ஸன் பேடென்ட் கார்ன்ப்ளவர்
½ லிட்டர் பால்
4 டே. ஸ்பூன் (மட்டமாக) சர்க்கரை
சிறிய உருண்டை வெண்ணெ
75 கிராம் முந்திரி அல்லது வால்னட் (நறுக்கியது)
50-60 கிராம் பேரிச்சம்பழம் (நறுக்கியது)
நறுக்கிய வாழை அல்லது கலப்புப் பழத் துண்டுகள் மேலே தூவ
(தேவையானால் வேண்டிய எஸ்ஸென்ஸ் சேர்க்கலாம்)

1. ப்ளேவர்டு மற்றும் பேடென்ட் பிரவுன் & போல்ஸன் கார்ன்ப்ளவர் இரண்டையும் சிறிது பாலில் கரையவிடவும்.

2. எஞ்சிய பாலைக் காய்ச்சி அடுப்பிலிருந்து இறக்கவும். பிரவுன் & போல்ஸன் கார்ன் ப்ளவரைச் சேர்த்து நன்கு கலக்கவும்.

3. மீண்டும் அடுப்பில் வைத்து சர்க்கரை, வெண்ணெ, நறுக்கிய முந்திரி அல்லது வால்னட் பருப்புக்கள் முதலியவற்றைச் சேர்க்கவும். கிளறியபடியே இரண்டு நிமிடங்களுக்குக் கொதிக்க வைக்கவும்.

4. நறுக்கிய பேரிச்சம்பழத்தைச் சேர்க்கவும்.

5. நன்கு கிளறி ஈரமான அச்சில் ஊற்றவும்.

6. குளிர்ந்ததும், நறுக்கிய வாழை அல்லது கலப்புப் பழத்துண்டுகளை அலங்காரமாகத் தூவிப் பரிமாறவும்.

**பக்குவ முறைப் போட்டி**

கார்ன் ப்ராடக்ட்ஸ் தயாரிக்கும் ஒன்று அல்லது மேற்பட்ட பொருள்களை உபயோகப் படுத்திய உங்களுடைய சொந்தமான பக்குவ முறையை எங்களுக்கு அனுப்புங்கள். ஏற்றுக் கொள்ளப்படுபவை இப் பக்கங்களில் பிரசுரிக்கப்படுவதுடன், ரூ. 150 ரொக்கப் பரிசோடு கவர்ச்சியான வெகுமதியும் பெறுவீர்கள்!

இலவசம்! புதிய பக்குவ முறை நூல் தொ. 2. இன்றே ஒரு பிரதிக்கு எழுதுங்கள்.

தயவு செய்து எனக்கு ஒரு பக்குவ முறை செட்டை ஆங்கிலம்/ இந்தி / வங்காளம் / தமிழ் / தெலுங்கு / மலையாளம் / குஜராத்தி / மராத்தி / கன்னடத்தில் / இலவசமாக அனுப்பி வைக்கவும்.

பெயர் ..............................

முகவரி ..............................

..............................

இக் கூப்பனைப் பூர்த்தி செய்து அனுப்புக:
கார்ன் ப்ராடக்ட்ஸ் கம்பெனி (இந்தியா) பிரைவேட் லிமிடெட்
ஸ்ரீ நிவாஸ் ஹவுஸ், வாட்பி ரோடு, பம்பாய்-1. (பிஆர்)

K-2

இது போல் இன்னும் பலவகையான தின்பண்டங்களைத் தயார் செய்து உங்கள் குடும்பத்தினரை மகிழ்விக்கலாம். பின் வரும் இதழ்களைக் கவனித்து வாருங்கள்.

பக்குவ முறையை அனுப்புக: பப்ளிஸிடி டிபார்ட்மென்ட்

**கார்ன் பிராடக்ட்ஸ் கோ. (இந்தியா) பிரைவேட் லிட்.**

ஸ்ரீ நிவாஸ் ஹவுஸ், வாட்பி ரோடு, பம்பாய்-1. (பிஆர்)

ஏகபோக விற்பனை ஏஜெண்டுகள்: பாரி & கம்பெனி, டேர் ஹவுஸ், சென்னை-1. மற்றும் அவர்களது கிளைகள்

## சுழலும் ஹோட்டல்!



படத்தைப் பார்த்தால் ஏதோ ஒரு ராட்சத யந்திரம்மாதிரி இருக்கிறதல்லவா? ஆனால் உண்மையில் அது யந்திரமில்லை; ஹோட்டல்! அதுவும் சுழலும் ஹோட்டல்! பக்கவாட்டில் பெட்டி மாதிரி தோன்றுபவை ஒவ்வொன்றிலும் நான்கு பேர் உட்காரலாம். எல்லாப் பெட்டிகளும் மெதுவாக நகர்ந்துகொண்டேயிருக்கும். (நம் ஊர் திருவிழாக்களில் வரும் தொட்டில் ராட்டினம்மாதிரி) ஒரு சுற்றுச் சுற்றி வர இருபது நிமிஷம் ஆகிறது. அடுத்த ஆண்டு ஜப்பான் நாட்டில் உள்ள ஓஸகா நகரத்தில் நடக்கவிருக்கும் உலகக் கண்காட்சியில் (எக்ஸ்போ 70) இந்த மாதிரி நான்கு ஹோட்டல்கள் நிறுவப்படுமாம். இதன் உயரம் 102 அடி. ஒரு ஹோட்டலைக் கட்ட 17,41,600 ரூபாய் செலவாகிறது.

• சரோஜா ராமச்சந்திரன்

தூட்டு நாங்க எப்படித் தாங்கறது சொல்லுங்கோ? நாளைக்கு ஒண்ணு குறைஞ்சா, பெற்றவள்னு என்னைத் தானே இடிக்கக் காட்டுவாள்?'' என்றாள் அவள்.

ஃ ஃ ஃ

**கா**லை எட்டு மணி.

பஸ் புறப்படும் சமயம். எல்லோரும் வண்டியில் ஏறிக் கொண்டு விட்டார்கள்.

சீதா விஜயாவைக் கையில் ஏந்திக் கொண்டு பஸ்ஸருகே நின்றாள். அத்தையுடன் தானும் போவேன் என்று பிடிவாதம் பிடித்தாள் குழந்தை. அவளையும் அடக்க முடியாமல் காயத்ரிக்கும் கொடுக்க முடியாமல் தவித்தபடி நின்றாள்.

பிரசாதமும் பழமும் நிறைந்த ஒரு சிறு பிரம்புக் கூடையைக் காயத்ரியிடம் கொடுத்து, 'சமர்த்தாக இரு, அம்மா!'' என்று இரண்டு வார்த்தைகள் கூறி முடிப்பதற்குள் என் விழிகள் கலங்கி விட்டன.

சற்றுத் தள்ளி நின்று கொண்டிருந்தார் அப்பா. நெருங்கி வந்தால் அழுது விடுவார் போல் கண்கள் கலங்கின.

அம்மா பெண்ணிடம் ஏதேதோ சொன்னாள். அவள் சிரித்தபடியே தலையை ஆட்டினாள். தூரத்தில் தெரிந்த தோழிகளிடம் கைகளை ஆட்டி விடைபெற்றுக் கொண்டாள்.

பஸ் புழுதிப் படலத்தை வாரி இறைத்தபடி புறப்பட்டுப் போயிற்று. அந்தப் புழுதியும் எங்கள் கண்ணீரும் காயத்ரியை எங்கள் பார்வையிலிருந்து மறைத்தன.

ஃ ஃ ஃ

**ப**ன்னிரண்டு மணி. சமையற்காரர் இலையைப் போட்டுவிட்டு எங்களைக் கூப்பிட்டார்.

அம்மாவைக் காணோம். ஓர் அறையில் படுத்துக் கொண்டிருந்தாள். தூங்குகிறாள் என்று எண்ணி எழுப்பினேன். எழுந்தவளது கண்கள் கலங்கியிருந்தன.

''என்னம்மா, அழுதாயா?'' என்று கேட்டேன்.

''இல்லையே. ராத்திரி தூங்கவேயில்லையே. கொஞ்சம் சிவந்திருக்கிறது'' என்றாள் அவள். குரல் உடைந்திருந்தது.

சத்திரத்தைக் காலி செய்து விட்டு, எங்கள் வீட்டுக்கு வந்தோம். புடவை உலர்த்தும் கொடிகளில் ஒன்று காலியாக இருந்தது. வருடக்கணக்காக அங்கு காயத்ரியின் புடவை உலர்த்தப்பட்டு இருந்திருக்கிறது. அந்தக் கொடியையே அம்மா வெறிச்சோடிய பார்வையால் அளந்து கொண்டிருந்தாள்.

மறு நாள் காலை நான் ஸ்நானம் செய்யக் குளியலறைக்குப் போனேன். அத்தனை வெந்நீரையும் நான் விரைத்துவிட்டுப் போகிறேன் என்று அம்மா பயப்படுவாள். அன்றும் அதே போல், ''நீ குளித்து விட்டுக் காயத்ரிக்கும்.....'' என்று ஆரம்பித்தவள் திடீரென்று நிறுத்திக் கொண்டு விட்டாள்.

ஒரு வாரத்துக்குப் பிறகு சீதா என்னிடம் சொன்னாள்: ''காயத்ரி புக்ககம் போனபிறகு அம்மா ஆடிப் போய் விட்டார்கள். எதுவுமே சரியாகச் சாப்பிடுவதில்லை. பிரமை பிடித்தாற் போலிருக்கிறார்!''

''அன்றைக்கு என்னவோ பாறை மாதிரி அசையாமல் இருந்தாளே!'' என்றேன் சற்றுக் கோபத்துடன்.

''புக்ககம் போகிற பெண் கலங்கக் கூடாது என்று அப்படி இருந்தார்களாம்....''

''ஆமாம்.... கடலைவிட ஆழமானது, உங்கள் மனசு என்று தெரியாமலா சொல்லியிருக்கிறார்கள்?'' என்றேன் நான்.

இரண்டு தினங்கள் கழித்துக் காயத்ரியிடமிருந்து கடிதம் வந்தது. எங்களிடமிருந்து பிரியும் போது அழுகை அழுகையாக வந்ததாம் அவளுக்கு. அம்மா எங்கே மனம் கலங்குவாளோ என்று உதட்டில் புன்னகையும் உள்ளத்தில் பிரிவுத் துயருடனும் அவள் துடித்துப் போனாளாம்!

நல்ல அம்மா, நல்ல பெண், போங்கள்!

# 'ஆஸ்ப்ரோ'

# மட்டுமே மைக்ரோஃபைன்ட் செய்யப்படுகிறது அதிவேகமாக வலியை வெளியே இழுப்பதற்காக










சாப்பிடும் அளவு:
வயது வந்தவர்கள்: இரண்டு மாத்திரைகள் தேவையானால் மீண்டும் சாப்பிடவும்.
குழந்தைகள்: ஒரு மாத்திரை அல்லது உங்கள் டாக்டர் சொற்படி

கீழ்க் கண்டவைகளுக்கு புதிய மைக்ரோஃபைன்ட் 'ஆஸ்ப்ரோ' சாப்பிடுங்கள்:
நோவு • தலைவலி • உடல்வலி • ஃப்ளு • ஜுர வேகத்துடன் கூடிய ஜலதோஷம் • மூட்டுவலி • தொண்டை அழற்சி • பல்வலி.

புதிய மைக்ரோஃபைன்ட் 'ஆஸ்ப்ரோ' இப்பொழுது கிடைக்கும் அதி நவீனமான வலி நிவாரணியாகும்.



**புதிய மைக்ரோஃபைன்ட் 'ஆஸ்ப்ரோ' அதிவேகமாக வலியை வெளியே இழுத்துவிடுகிறது.**

நிக்கோலஸ் (N) தயாரிப்பு

# கிரிக்கெட் தமாஷ்!


இருக்கிற நிலைமை
உங்களுக்குத் தெரியும்,
உங்களால் முடிந்த வரை
பிரயாசைப் பட்டு
எவ்வளவு பொறுப்பு
இல்லாமல் ஆட முடியுமோ
அவ்வளவு
அலட்சியமாக
ஆடி விட்டு
வாருங்கள்!


வெற்றியைக் கொத்திண்டு
போவதற்கு 'லாரி'
காத்துக் கொண்டிருக்கிறீர்
பாருங்கள்!


இவ்வளவு பெரிய கிரௌண்டில்
உனக்கு அடிக்க வேறு
இடம் அகப்படவில்லையா?


ADULTS ONLY


சுத்த அசடு. இதுக்கு அவுட்டாகத் தெரியல்லே. அட்டை மாதிரி ஒட்டிண்டு விட்டது!
ரன்களோ அதிகமாகக் கூட்டிப் பெருக்கிக் கொண்டு வா என்றால் 'இடத்தை' கூட்டிப்பெருக்குகிறாரே இந்த 'மெய்ன்'!
கல்வர் பக்கத்தில் 'பிக்மி', மாதிரி போறான். வரச்சே எப்படி வளர்ந்து வரப்போறான், பாருங்கள்!
இவ்வளவு பெரிய கூட்டத்திலே எல்லோரும் இந்தியா ஜெயிக்கணும்னு வேண்டிக்கிறு- பதினொரு பேரைத் தவிர......"
"யார் அவர்கள்?"
"நம் இந்திய ஆட்டக் காரர்கள்!"
சாமா


P.W.D. CANTEEN



# சிவன் சொத்து

வசுமதி ராமசாமி

"டொக்... டொக்...."

கத்தியால் எதையோ சுழற்றுவது போன்ற சத்தம்; தொடர்ந்து சின்னக் குரலில் பேச்சு; நகைகளில் கல்லிழைக்கும் போது ராவுவது போன்ற ஒலி; மறுபடியும் 'கசமுச'வென்று பேச்சு.

சுவாமிநாத ஓதுவார் அரைத் தூக்கத்தில் எழுந்து உட்கார்ந்தார். முந்திய இரவு கைலாச நாதனைக் கண்ணாரத் தரிசித்து விட்டு அப்படியே வாகன மண்டபத்தின் ஓரமாகப் படுத்து விட்டார். சில நாட்கள் வீட்டுக்குப் போகாமல், அசதியாக இருந்தால் 'பாடலேயா' கோயிலிலேயே படுத்து விடுவது வழக்கம்தான். நேற்று ஐப்பசிமாத அடைமழை இல்லாவிட்டாலும், பிசுபிசுத்த தூறல் வேறு.

கண்ணைக் கசக்கிக் கொண்டு பார்த்தார். எதிரே வாகன மண்டபத்தில் இருளிலும் கம்பீரமான வெள்ளி ரதம் மினுமினுத்தது. ரதத்தை அரைகுறையாக மூடியிருந்த நீலத் துணி மினுமினுப்பை அதிகமாக்கிக் காட்டியது. ஓதுவாருக்குக் காவலாக இருந்த அந்த வாகனத்தில் கைலாசபதி வீற்றிருப்பது போலவே தோன்றியது. குருக்கள் ஏதோ சொல்லிக் கொண்டிருந்தார். அவருக்கு மெதுவாகவே பேசத் தெரியாது. ஆர்வத்தில் இரண்டு குருட்டு வௌவால்கள் கத்திக்கொண்டு சுற்றிச் சுற்றி வந்தன. ஒன்று ஓதுவாருக்கு மிக அருகில் வந்து காதை உரசிக் கொண்டு போயிற்று. ஓதுவார் ஒருவித பிரமையுடன் பார்த்துக் கொண்டிருந்தார். சுழன்று சுழன்று வந்த டார்ச் ஒளியில், குருக்களோடு பேசிக் கொண்டிருந்த இரண்டாவது மனிதரும் தெரிகிறது. அந்த மனிதரின் முகம் தற்செயலாக ஒளியில் எதிர்ப்பட்ட போது, ஓதுவார் வாய் வியப்பில் தானாகத் திறந்து கொண்டது. மூன்றாவது நபர் ஆணா? பெண்ணா? — அதிர்ச்சியில் மூளை மரத்துப் போய் விட்டது. கண்டு பிடிக்க முடியவில்லை.

"மிகவும் கவனமாக இருக்கணும். மூலை ஓரம் உடைஞ்சிட்டா மதிப்பே போயிடும்."

"ஆமாம். அதுக்குத்தானே நான் ஜாக்கிரதையா ராவி எடுக்கிறேன்? ஆயிரமாயிரம் பேர் பார்த்து, ஆயிரம் ஆயிரமாக் கொடுத்து வாங்கப் போறது இல்லையோ?"— இது குருக்களின் குரல். ஓதுவாருக்கு எல்லாம் புரிந்து போயிற்று. அதற்கு மேல் பேச்சைக் கேட்க விருப்பமுமில்லை; கேட்கவும் இல்லை. மறுபடியும் படுத்துக் கொள்ளும் போது, அவர் பிரயாசைப்பட்டு அடக்கினதையும் மீறி அஸ்துமா இருமல் 'கல்' லென்று ஒலித்தது. அவசர அவசரமாய்க் கண்ணை மூடிக் கொண்டு, குறட்டை மாதிரி ஒலி செய்யும் போது, ஒளி வட்டம் கண்ணைச் சுற்றிக் கூசியது. குருக்கள், "யாரது?" என்று இரைந்தார். ஓதுவார் அசையாமல் படுத்திருந்தார்.

பிசுபிசுவென்ற தூறல் கனத்து, காற்றோடு சேர்ந்து, ஒரே சப்தமாய் மழை.

அன்று இரவு ஓதுவார் தூங்கினாரா? விழிப்பிலேயே இருந்தாரா?

மறு நாள் காலை கோயில் பிராகாரம் முழுதும் குட்டை குட்டையாகத் தண்ணீர். அவ்வளவு அழுத்தமான பெரிய கதவுகளுக்கிடையே மழை ஜலம் அடித்துச் சகதியாய்ப் போய் விட்டது.






ஓதுவார் வழக்கத்துக்கு விரோதமாகச் சற்றுக் கண் அயர்ந்து விடுகிறார். சாளரம் வழியாக, வெய்யில் உடலைக் குத்தும்போது பரக்கப் பரக்க எழுந்து உட்காருகிறார் ஓதுவார்.

''பாட்டையா! உடம்புக்குச் சொகமில்லையா?'' என்று கேட்கும் பண்டாரத்துக்குப் பதில் சொல்ல நேரமில்லை.

எதிரே இருந்த திருக்குளத்தில் அவசரமாக நீராடி விட்டு ஈரத் துணியுடன் இரைக்க இரைக்க வருகிறார். வயது சென்ற தளர்நடையுடன் ஈசனைப் போற்றிப் பாடிக் கொண்டே வரும் அந்தப் பெரியவருக்கு, மனத்துக்குள் எங்கிருந்தோ இளமை புகுந்து கொள்கிறது.

பெரிய மணி ஒலிக்கிறது. குருக்கள் தீபாராதனை செய்ய ஆரம்பிக்கிறார். தவில், நாதஸ்வரம் சங்கநாதம் எல்லாம் சேர்ந்தாற்போல் ஒலிக்கின்றன. ஓதுவாரின் ஈரத் துணியெல்லாம் உலர்ந்து போயிருக்கிறது. ஓதுவார் கரம் குவித்து, கண் மூடித் தேவாரம் பாட ஆரம்பிக்கிறார். மற்ற வாத்தியங்கள் நின்று விடுகின்றன. ஓதுவார் அன்று தேவாரமா பாடினார்? இல்லை, தேன் 'ஆரம். குருக்களுக்குக்கூடக் கண்ணீரில் பார்வை மங்குகிறது.



ஓதுவார் வெளியே வரும் போது எதிரே சைக்கிளைத் தள்ளிக் கொண்டு ரங்கன் வீட்டு வேலையாள் வருகிறான்.

''பாட்டையா! ஐயா உங்களை உடனே கூட்டியாரச் சொன்னாரு.''

''என்னையா?''

ஓதுவாருக்கு டார்ச் லைட் ஒளியும், ரம்பம் அறுக்கும் ஒலியும் திரும்பத் திரும்ப நினைவுக்கு வருகின்றன.

மாடி வீடு; அந்த ஊரையே அரசாள்வது போல் எழும்பி உயர்ந்து நின்றது. தலைமுறை தலைமுறையாக ஈசனைப் பணிந்தே உயர்ந்து விட்டவர்களல்லவா? வீட்டின் உள்ளே போனார் ஓதுவார்.

முற்றத்து வெய்யில் காலில் இதமாகப் படும்படி டிரஸ்டி உட்கார்ந்திருந்தார். கணக்குப் பிள்ளை தூண் ஓரமாக உட்கார்ந்து மாதக் கணக்கை ராகம் போட்டு வாசித்துக் கொண்டிருந்தார். அப்படி வாசிப்பதில் கணக்கில் சற்றுக் கூடக் குறைய இருந்தாலும் கண்டு பிடிக்க முடியாது என்று அவருக்கு ஒரு நம்பிக்கை.

ஓதுவார் மெல்லக் கனைத்தார்.





ஓதுவாரைப் பார்த்ததும் நிமிர்ந்து உட்கார்ந்தார் டிரஸ்டி.

''பாடலையாவா ? வாங்க !''

''வந்தேனுங்க !''

மறுபடியும் அரைக் கண்ணை மூடிக் கொண்டு சாய்ந்து உட்கார்ந்து கொண்டார் டிரஸ்டி.

கணக்கில் இன்னும் ஐந்து நாட்கள் கணக்கு ஓடியது.

''வீட்டிலே எல்லாரும் நலந்தானு ?''

''ஆமாங்க.''

''குடும்பப் பொறுப்பு முழுதும் முடிச்சுப்பிட்டாத்தான் நமக்கு நிம்மதி, இல்லையா?''— டிரஸ்டி மோவாயை மெல்லத் தடவிக் கொண்டார். ஓதுவாருக்கு இதற்கென்ன பதில் சொல்வதென்று தெரியவில்லை.

''வடிவுக்கு என்ன வயசாவுது ?''

''சித்திரை பொறந்தாப் பதினாறு முடியுது. சித்திரை உத்திரட்டாதி ; மாச முதல் வியே வருது.''

''இந்த வருஷத்திலே அப்போ எப்படியும் கல்யாணத்தை முடிச்சுப்பிடணும்?'' என்றார் டிரஸ்டி.

டிரஸ்டியின் பெண் நகரத்திலே கல்லூரியில் ஏதோ பெரிய படிப்பு படித்துக் கொண்டிருந்தது ஓதுவாருக்கு நினைவு வந்தது. 'இவருக்கு என்ன திடீர் என்று தன் குடும்பத்தின் மேல் இத்தனை அக்கறை ?'

''என்ன? முடிச்சுப்பிடணும் இல்லையா?'' குரல் ரொம்ப அதிகாரத்தோடு வந்தது.

பண்ணையார் பேச்சுக்கு அவ்வப்போது, 'சரிங்க' 'ஆமாங்க' போடா விட்டால் அவமரியாதை இல்லையோ ?

''அந்தக் கைலாசநாதன் கருணை இருந்து நடக்கணுமுங்க'' என்றார் ஓதுவார்.

''பணம் வச்சிருக்கீங்களா ?''

ஓதுவார் மெல்லச் சிரித்தார்.

''தாண்டவபுரிசன் வச்சிருக்கான். குழந்தைகளுக்கு வேணுங்கிறப்போ கொடுக்கிறான்.''

டிரஸ்டியின் தயவு பற்றி ஒன்றுமே குறிப்பிடாமல் ஆண்டவன் வைத்திருப்பது பற்றிப் பேசுவது, அந்த ஊரின், அந்த வம்சத்தின், ஏன் ஓதுவாரின் வழக்கத்துக்கே விரோதம் என்ற உண்மை டிரஸ்டியின் மனத்தில் தைக்காமல் போகவில்லை. அன்று காலை குமாரசாமி குருக்கள் சொன்னது நினைவுக்கு வந்தது. 'நேற்று இந்தக் கிழம் விழித்திருந்திருக்குமோ?' 'இப்படித்தான் இதைச் சரிக்கட்டணும்' என்று முனகிக் கொண்டார் டிரஸ்டி.

''எதுக்குச் சொன்னேன்னு.... அதாவது உங்களுக்கும் வயசாச்சு ; குரல்லே இலேசா நடுக்கம்கூட வந்துடுத்து. இனிமே நான் தவறாம கோயில்லே பாடறது உங்களுக்குக் கஷ்டந்தானே ? இரண்டு மணி நிக்கறதுன்னு சும்மாவா? வயது பின்னேங்ககூடக் கால் மரத்துப் போவாக.''

ஓதுவார் நடுவில் ஏதோ சொல்ல ஆரம்பித்தார். டிரஸ்டி இன்னும் உரத்த குரலில் தொடர்ந்தார்:

''இனிமே நீங்க வீட்டிலே உட்கார்ந்து ரெண்டு எடுத்துக்க வேண்டியதுதான். வடிவுக்கு ஒரு கலியாணத்தைக் கட்டிப் போட்டுட்டா, பிறகு என்ன? ஒரு பொறுப்பும் இல்லே.... நான் வேணும்னு ஆயிரம் ரூபாய் தரேன். கவர்ன்மெண்ட் உத்தியோகத்திலே இருக்கிறவங்களுக்கு பிராவிடண்ட் பண்டு, பென்சன் தராங்களே, அந்த மாதிரி ஒரு மான்யம்! என்ன கேக்கிறீங்களா? மின்ன வடிவுக்கு ஒரு வரனைப் பாருங்க! ஆயிரம் ரூவா இருந்தா கலியாணத்தைப் பிரமாதமா நடத்திடலாம்....''

டிரஸ்டி பேசும்போது ஓதுவாரின் முகத்தைப் பார்க்கவில்லை. முற்றத்திலே மேலும் கீழுமாக நடந்து கொண்டிருந்தார்.

ஓதுவாருக்கு மிக அருகே பெரிய அதிர்வெடி வெடித்ததைப் போல் இருந்தது. 'ஆயிரம் ரூபாய்' அது என்ன, கூலியா ? எதற்குக் கூலி ? ஈசனைப் பற்றிப் பாடாமல் இருக்கவா? வேறு எதைப் பற்றியோ பேசாமல் இருக்கவா ?'

கணக்குப் பிள்ளை மாதக் கடைசிக்கு வந்து விட்டார்.

''அப்புறம் வந்து சொல்றேனுங்க '' என்று ஓதுவார் முணு முணுத்தார்.

திரும்பி வாசலைக் கடக்கும்போது, மீண்டும் டிரஸ்டி சொன்னார் : ''எல்லாத்தையும் யோசிக்க நாளுக் கொடுக்கிறேங்கறேன். வர்ற லட்சுமியைவிடக் கூடாதுன்னேன் !''

தெருக்களிலே விசித்திரமாய்க் கோலங்கள். ஊருக்கு நடுவே நிலவில் எத்தனையோ வேடிக்கைகள். ஒரு பெரிய ரங்கராட்டினம் சுழலுகிறது. கீழே நிற்பவர்கள் மேலே ஏறுபவர்களைப் பார்த்து அதிசயிக்கிறார்கள்.

'' இந்த வெள்ளி ரத உத்ஸவத்தைப் பார்க்கக் கொடுத்து வைத்திருக்க வேண்டாமோ? எங்க மாமியாரிடம் சொல்லி, 'பர்மிஷன்' வாங்கிண்டு பஸ் ஏறி வரதுக்குள்ளே போறும் போறும்னு ஆயிடுத்து '' என்று தன் அம்மாவிடம் சொல்லிக்கொண்டு போகும் ஓர் இளம் பெண்.

ரதம் அழகாக அசைந்து, கோபுர வாசலை விட்டு நகர்ந்து வந்தது. தேர் கிளம்பும் போது, அதிர்வெடி, பாண்டு, கொட்டுமேளம் எல்லாம் ஏககாலத்தில் ஒலித்தன. ''சாமி புறப்பட்டாச்சு '' என்று பெண்களெல்லாம் ஓடினார்கள்.

ராஜகோபுரத்தைத் தாண்டி ரதம் வந்தது. ரதத்தின் மேல் கட்டியிருந்த ரசகுண்டுகள் சூரிய ஒளியில் பல வர்ணங்களை வீசின. ஏக ஆசனத்தில் சுவாமியும், அம்மனும் வீற்றிருப்பது அந்த ஊர்த் திருநாளின் தனிச் சிறப்பு.

ஐம்பது ஆண்டுகளுக்குமுன் பாடுபட்டு அமைத்த ரதம்; தல புராணத்தைப் படித்து, ரதோத்சவம் மகத்துவமானது என்று கண்டார் இந்த டிரஸ்டியின் பாட்டனார். சிதம்பரத்தில் இரண்டாண்டுகள் வேலை நடந்தது. பொன் தச்சர்கள் இராப்பகலாக வேலை செய்தார்கள். அத்தனை தச்சர்களுக்கும் ராஜ உபசாரம். ரதம் அற்புதமாக அமைந்தது. முகப்பிலே, இந்திராதி தேவர்கள் ஈசனை வணங்குவது போல் தோற்றம். பிரமன் ரதத்தின் சாரதி. ஒரு பிம்பத்தின் அழகைப் பார்க்கும் போது, வேறொன்றை நோக்கத் தோன்றாது. ஐம்பதாண்டுகளாக ரதோத்சவம் விமரிசையாய் நடந்து வருகிறது....

கூட்டம் நெருக்கியது. மாட வீதியில் ரதம் அசைந்து வந்தது. 'அரோகரா' என்று பக்திக் கூச்சல். குருக்கள் ரதத்தின் ஒரு பக்கத்தில் உட்கார்ந்து கற்பூர ஆரத்தி எடுத்துக் கொண்டே யிருந்தார். போட்டி யிட்டுக் கொண்டு, தேங்காய்ப் பழத் தட்டுகள் மேலெழும்பின.

பண்ணையார் கண்ணை மூடிக் கொண்டிருந்தார் — பக்தி பரவசத்திலா ?

ஓதுவார் ஓர் ஓரமாய் நின்று ரதத்தையே உற்றுப் பார்த்துக் கொண்டிருந்தார்.

திடீரென்று 'மட மட'வென்று சத்தம். ரதத்தின் அடியில் இருந்த கருங்காலி மரம் முறிந்து ரதம் சரிந்து கொண்டிருந்தது. 'ஐயோ' என்று ஜனப் பெருக்கில் ஒரே கூச்சல். ரொம்ப முன்னே போய்க் கொண்டிருந்த நாதசுர வித்வான்கள் வாசிப்பதை நிறுத்தி விட்டு ஓடி வந்தார்கள். ஒரே அலங்கோலம்.

எல்லாம் சில நிமிஷங்களில், அற்புதமான, மங்களகரமான காட்சி சிதைந்து விட்டது.

டிரஸ்டிக்குப் பின் மண்டையில் ஏதோ சுரீரென்று வலி. 'கோயில் சொத்தை நம்ப சொத்து மாதிரி காப்பாத்தினேத்தான், நம்மையும் நம்ம சொத்தையும் ஆண்டவன் காப்பாத்துவான்' என்று தந்தை கடைசியாய்ச் சொன்னது நினைவைத் தாக்கியது. தற்செயலாகத் திரும்பும் போது, ஓதுவார் தம்மையே பார்த்துக் கொண்டிருப்பது தெரிகிறது. ஓதுவார் முகத்தில் என்ன உணர்ச்சி ?

கோயில் பிராகாரத்தில் குருக்கள் மணியக்காரர், டிரஸ்டி வீட்டுக் கணக்குப்பிள்ளை, சிப்பந்திகள் — எல்லாமாய் ஒரே கூட்டம். டிரஸ்டி வீட்டு டிரைவர், பூஜைக்குப் பால் எடுத்துக் கொண்டு வரவே, ''எப்படி இருக்கிறாருப்பா?'' ''டாக்டர் வந்தாரா?'' என்று ஒவ்வொருவரும் கவலையைத் தெரிவித்துக் கொண்டார்கள். கோயிலுக்கு டிரஸ்டி என்பதோடு ஊருக்குப் பெரியவர் ; பணக்காரர்.

டிரைவர் எந்தக் காரணத்தாலோ தனக்கு முக்கியத்துவம் வந்துவிட்ட பெருமிதத்தில் நிமிர்ந்து நடந்தான்.

''ஐயா மக பட்டணத்திலே டாக்டருக்குப் படிக்குதே ! அது பெரிய பெரிய டாக்டருங்களை யெல்லாம் கூட்டியாந்திருச்சு. எல்லாம் மருந்து எழுதறாங்க. கூடிப் பேசறாங்க. மார் நோவாம்; இப்பொரு முறை வரக் கூடாதாம்'' என்றார் டிரைவர்.

''விடிய விடிய மன்னனுக்கு நாப்பத்தஞ்சு வயசுதானே ! மனுஷ காயம் அநித்தியம்'' என்று முடிவு கட்டினார் பண்டாரம்.

''வீட்டுக்குத்தானே போறீரே ? நானும் பிரசாதம் எடுத்துண்டு வரேன்'' என்று குருக்கள் கார்ச் சவாரியை நினைத்துக் கொண்டு கிளம்பினார். கூட்டம் கலைந்தது.

''டாக்டர்கள் வந்திருக்கிறார்களாம். வந்து என்ன செய்ய ? அவன் திருவிளையாடல்'' என்று தனிமையில் சற்று உரக்கவே சொல்லிக் கொண்டார் ஓதுவார்.

டிரஸ்டி மோட்டு வளையைப் பார்த்துக் கொண்டு படுத்திருந்தார். 'கிண்'ணென்று பெரிய ஃபேன் ; மேலே ஆளுயரப் பெரிய நாகப்பட்டினம் 'டிராயர்'கள் ஏழெட்டு ; ஓலைக் கூடைகள்; செட்டிநாட்டு மரக் கூடை யெல்லாம் அவருக்கு ஐம்பது வருடங்களாய்க் குடும்பம் வாழ்ந்து வரும் பெரு வாழ்வை நினைவூட்டின. இன்னும் இரண்டு தலைமுறை உட்கார்ந்து சாப்பிடும் அளவுக்குச் சொத்து வைத்து விட்டுப் போயிருந்தார் டிரஸ்டியின் தந்தை. எவ்வளவு இருந்தால் என்ன ? ஆசை யாரை விட்டது ?....

'அந்தப் பொருள் என்னவாகியிருக்கும்' என்று யோசித்தார். 'யாராவது கண்காட்சியிலிருந்து, ஆயிரமோ இரண்டாயிரமோ கொடுத்து வாங்கிப் போயிருப்பார்கள். மிகச் சிறப்பான கை வேலையாயிற்றே ! சிதம்பரத்துத் தச்சர்கள் பார்த்துப் பார்த்துச் செய்த கலைப் பொருள்களல்லவா? அமெரிக்காவுக்கோ, ஜப்பானுக்கோ போய்க் கொண்டிருக்கும். நம்மூர் குத்து விளக்கை வாங்கிச் சென்று அமெரிக்காவில் 'ஆஷ் டிரே'யாக உபயோகிக்கிறார்களாமே?' மறுபடியும் நெஞ்சு வலித்தது.

''நமஸ்காரம்''

''நமஸ்காரம்.''

திரும்பிப் பார்த்தார் குருக்கள்.

சாய்ந்து நீண்ட கண்களைப் பார்க்கும் போது நாகப் பாம்பைப் பார்ப்பது போல் இருந்தது. சில வேளைகளில்தான் சில மனிதர்களைப் பிடிக்கிறது. மற்ற சமயங்களில்

---

பஸ் ஸ்டாப்புக்கு எதிரில் ஒரு சிறு கடை வைத்திருக்கிறேன் நான். பஸ்ஸுக்குக் காத்திருப்பவர்கள் அடிக்கடி என் கடையில் வந்து 'டைம் என்ன?' என்று கேட்பார்கள். அவர்களுக்குப் பதில் சொல்லி மாளாததால் ஒரு கடிகாரமே வாங்கிக் கடையில் மாட்டினேன். அதோடு பிரச்னை தீர்ந்ததா? அதுதான் இல்லை. இப்போது எல்லோரும், ''உங்கள் கடிகாரம் காட்டும் டைம் சரிதானா?'' என்று கேட்கிறார்கள்.

ஆதாரம்: 'டிட்பிட்ஸ்' நகலல்: சரோஜா ராமசந்திரன்



---



'கிரெம்ளின்' என்றால் ரஷ்ய மொழியில் கோபுரம் என்று பொருள். கோபுரம் போன்ற கட்டிடங்கள் நிறைய இருப்பதால் ரஷ்யத் தலைமை அலுவலகத்தை 'கிரெம்ளின்' என்று சொல்கிறார்கள்.

'வோர்ல்ட் டைஜஸ்ட்' — 'பாவி'

அவர்களைப் பார்த்தால் அடித்துப் போடலாம் போலிருக்கிறது.

"பிரசாதம் கொண்டு வந்திருக்கேன்" என்று பொட்டலத்தைப் பிரித்தார் குருக்கள். டிரஸ்டி எழுந்து உட்கார யத்தனித்தார்.

"எழுந்து உட்காராதீங்கோ! உடம்புக்கு ஆகாது. அப்படியே இட்டுடறேன்" என்று குங்குமத்தை நெற்றியில் தீற்றினார், குருக்கள். பிறகு குரலைத் தாழ்த்திக்கொண்டு "சின்ன விஷயத்துக்கெல்லாம் மனசை ரொம்ப அலட்டிக்காதீங்கோ. அன்னிக்கு, ரதம் முறிஞ்சு, உத்ஸவம் நின்னு போனது அபசகுனமாத்தான் பட்டுது. அதுக்காக என்ன பண்றது? ஸ்வாமிக்கு இந்த வருஷம் ஏனோ உலா வர விருப்பமில்லே. அடுத்த வருஷம் நன்னா உத்ஸவத்தை நடத்திட்டாப் போச்சு. நம்மாலேதான் அது நின்னு போச்சோன்னு மனசுக்குள்ளே குமையறேன்னு நெனக்கிறேன். அது ரொம்பத் தப்பு. எதுக்குச் சொல்றேன்னு.... உங்க தாத்தா, உழைச்சுச் சம்பாதிச்ச பணத்தைக் கொட்டிப் பண்ணி வச்ச ரதம்தான். அதுலே ஒவ்வொரு தூணுக்கும் உங்க சொத்து, உங்க செல்வம்தான்...."

'குருக்களுக்கு ஏன் மார்பு வலி இன்னும் வரவில்லை? கிழம் விழித்திருக்கிறதோ. அவருக்கும் தன்னைப் போல் நவற்றுக்கு மன்னிப்புக் கேட்கத் தோன்றுமா?'

டிரஸ்டியின் பெண் உள்ளே ஏதோ மாத்திரையை எடுத்துக் கொண்டு வந்தாள். குருக்கள் ரொம்ப அன்பாய் விசாரித்து விட்டு, விபூதி, குங்குமம் கொடுத்தார். அதை வாங்கி அரைகுறையாய் நெற்றியில் தடவிக் கொண்டாள்.

புரண்டு படுத்துக் கொண்டார் டிரஸ்டி. யாரிடமாவது தம் மனத்தில் இருப்பதையெல்லாம் சொல்லி அழ வேண்டும் போல் இருந்தது. பெரிதாக அழுது விட்டாலே, பாதிச் சுமை குறைந்துவிடும். சந்தேகமில்லே. யாரிடம் சொல்லி அழுவது? அந்தத் தாண்டவபுரீசுவரரிடத்திலா....? அவனிடம் எதைப் புதுசாய் முறையிடுவது? எல்லாவற்றையும் அறிந்தவன் அவன். அறிவுக்கும் அப்பாற்பட்டவன். வேண்டுமென்றுதானே தண்டனை கொடுத்து விட்டான்? அப்பர்களாய் இருக்கிற மனிதர்களிடத்தில் சொல்லி அழலாம். மனிதர்களிடம் சொல்வதென்பது, சல்லடையில் தண்ணீர் விடுகிற மாதிரி. இரண்டு நாட்களில் சின்னக் கிராமம் முழுவதும் இதே பேச்சாகும். 'சாமி சும்மா விட்டுடுமா? அக்கிரமம் செஞ்சான்; அழிஞ்சு போயிட்டான்' என்பார்கள். நேற்று செய்தது, நாளை செய்யப் போவது எல்லாம் மறந்துவிடும். "சிவன் சொத்தைக் கொள்ளையடித்தே சொத்து சேர்த்துவிட்ட குடும்பம்' என்று தாராளமாய்ப் பட்டம் அளிப்பார்கள். என்னதான் தப்பு செய்து விட்டாலும், ஊருக்கெல்லாம் சொல்லி மன்னிப்புக் கேட்க முடியுமா? மனித ஜென்மம் மன்னிக்கப் பிறந்தது இல்லையே!" யாரிடத்தில் இப்போது 'கன்'ஃபெஷன் செய்து கொள்வது? ஓதுவார்! ஆமாம், ஓதுவார்.... அவர்தான் சரியான மனிதர். பத்தரை மாற்றுத் தங்கம்....

ஓதுவாரைப் பற்றி நினைவு எழுந்த போது அவர் இதயத்துள் ஓர் ஊற்று எழும்பி, இதயமெங்கும் நிறைத்து, குளிர்ந்தது.

நான்கு நாட்களுக்குமுன் வெறுத்தவர்கள் இன்று இதமாகத் தோன்றுவதும், நான்கு நாட்களுக்கு முன் பிடித்திருந்தவர்களே, இன்று வெறுக்கத் தோன்றுவதும் அவருக்கு ரொம்ப வேடிக்கையாக இருந்தது. இரவு விழிப்பிலும், தூக்கத்திலும் இரண்டுமில்லாத ஒரு நிலையிலும் கரைந்து போயிற்று.

காலையில் கண் விழித்த போது ஓதுவார் எதிரே நின்று கொண்டிருந்தார். தளர்ந்த மேனியிலும், தாமிரத் தகடு போல் ஒரு பொலிவு. உடல், நெற்றி முழுதும் பட்டை பட்டையாய் விபூதிக் கீற்று.

டிரஸ்டி கண் விழித்ததைக் கண்டு அவசரத்தோடு அருகில் வந்தார் ஓதுவார்.

"உடம்பு கொஞ்சம் சொகந்தானா?"

"உம்...."

"சீக்கிரமே சரியாயிடுங்க; மனசு எதுக்கும் தளராமப் பாத்துக்கணும். அதுதான் முக்கியம்."

'இவரும் என்ன குருக்கள் மாதிரியே பேசுகிறார்? ஒரு வேளை இந்த மன நிலையில் யார் எதைப் பேசினாலும், நடந்துவிட்ட சம்பவத்தையே சுட்டிக் காட்டுவது போல் தோன்றுமோ?' என்று நினைத்துக் கொண்டார் டிரஸ்டி.

அறையைச் சுற்றி யாருமில்லை. மனைவி உள்ளே இருக்க வேண்டும். பெண் எங்கே போனாளோ? எல்லாவற்றையும் சொல்லித் தீர்க்கச் சரியான சந்தர்ப்பம். எதை என்று ஆரம்பிப்பது என்றுதான் தெரியவில்லையே. நிமிடங்கள் ஓடி மறைந்தன.

ஓதுவாரும் ஏதோ சொல்ல விரும்புவது போல் இன்னும் அருகில் வந்து நின்றார்.

"இந்த நேரத்திலே உங்க உடம்பு மோசமாயிருக்கிற சமயத்திலே இதைப் பற்றிப் பேசறது தப்புத்தான். இருந்தாலும் சமய சந்தர்ப்பம் அப்படி.... நீங்க கோவிச்சுக்கக் கூடாது..." ஓதுவார் எதையோ சொல்லச் சுற்றி வளைத்துப் பேசினார்.

"சொல்லுங்க, என்ன விஷயம்?" என்றார் டிரஸ்டி.

"அம்மைக்கு நீங்க ரூவா கொடுக்கறேன்னிங்களே.... அது.... அதைப் பத்தி யோசிச்சேன். கஷ்டமில்லாட்டா ஐயா உடனே கொடுத்தா கொஞ்சம் சவுகரியம்."

சின்னக் குழந்தை மண் கோபுரம் கட்டி விட்டு வேகமாக வந்து காலால் உதைத்துக் கலைத்தது போல் இருந்தது டிரஸ்டிக்கு. ஏன்று இந்தச் சந்தர்ப்பத்தில் அவர் இந்தப் பணத்தைக் கேட்பது பிடிக்கவில்லை. எல்லா மனிதர்களும் ஒரே மாதிரி பணத்துக்கு அடிமைகள்...

மனக் கசப்பில் மௌனமாகப் படுத்திருந்தார் டிரஸ்டி. ஓதுவார் காலை மாற்றி மாற்றி நின்றார். ஏதோ அப்படி ஓர் அவசரம்.

மனைவி எட்டிப் பார்த்தாள். "அட! எழுந்திருச்சிட்டீங்களா! கொஞ்சம் இருங்க, வரேன்!" என்று உள்ளே சென்றவளைக் கூப்பிட்டு நிறுத்தினார் டிரஸ்டி.

"இரும்புப் பெட்டியைத் திறந்து ஒரு ஆயிரம் ரூவா எடுத்துக்கிட்டு வா" என்று



''பாகவதர்வாள்! உங்கள் வாழ்க்கையிலேயே மறக்க முடியாத சம்பவம் என்னன்னு சொல்லுங்களேன்!''

''இருபது வருஷங்களுக்கு முன்னே, கும்பகோணத்திலே நான் கச்சேரி பண்ணினதுக்குக் கொடுத்தா பாருங்கோ, ஒரு தேங்காய் மூடி....அவ்வளவு பெரிசா என் வாழ்நாளில் வேறு எங்கேயும் நான் வாங்கினதேயில்லே!''

அவர் ஈன ஸ்வரத்தில் சொல்லும்போதே ஓதுவார் மெதுவாகக் கனைத்தார்

''கஷ்டமில்லேன்னு ஒரு இரண்டாயிரம் கொடுத்தா நல்லது. ஏன்னு எல்லாத்தையும் யோசிச்சுத்தான் சொல்றேன். அவ்வளவு தேவைப்படுது.'' கடைசி வார்த்தை சொல்வதற்குள் ஏதோ வந்து தொண்டையை அடைக்க எச்சிலைக் கூட்டி விழுங்கினார் ஓதுவார்.

இதற்குப் பெயர்தான் 'ப்ளாக் மெயிலா?' டிரஸ்டி 'தூ' என்று பக்கத்திலிருந்த பேஸினில் துப்பினார்.

ஒரு குற்றத்தைச் சொன்னால் அதை மறைக்க இன்னொரு குற்றம்; அதையும் மறைக்க வேறொன்று: இப்படித்தானே குற்றங்கள் வளருகின்றன? சிந்திக்க அதிக நேரமில்லை. மானம் ரொம்பப் பெரிது... '-இரண்டாயிரம்'' என்றார் மனைவியிடம். அந்த அம்மாள் பய பக்தியுடன் எடுத்துக் கொண்டு வந்தார். ''என் அப்பனே! காப்பாத்துடாப்பா'' என்று கும்பிட்டபடியே வந்தாள். அந்தப் பணம் ஏதோ கோயில் கைங்கரியத்துக்குத்தான் என்று தீர்மான மான நம்பிக்கை.

டிரஸ்டிக்கு அன்று காலையிலே உடம்பில் திடீரென்று பலம் வந்துவிட்டாற்போல ஒரு பிரமை. மனம் என்னவோ இன்னும் குழம்பித்தான் தவித்தது. ஆனால் கால்களிலெல்லாம் சக்தி வந்திருந்தது. பெண் பிடிவாதம் செய்து முன்னறைக்குப் படுக்கையை மாற்றியிருந்தாள். இங்குதான் காற்றோட்டம் அதிகமாம். ஜன்னலைத் திறந்தபோது தெருவில் நான்கைந்து பெண்கள் குடத்தை வைத்துக் கொண்டு வீட்டைத் தாண்டிப் போனது தெரிந்தது. எல்லாரும் கழுத்தைத் திருப்பி வீட்டையே பார்த்துக் கொண்டு போனார்கள்.

''தேவலையாமேடி! பாவம், பிழைத்துப் போகட்டும். கோவிலுக்குக் கொஞ்சமாவா செஞ்சிருக்கார்?'' என்று ஒருத்தி இரைந்து கத்திக் கொண்டு போனாள்.

டிரஸ்டி பெருமூச்சு விட்டார். ரகசியம் ரகசியமாகவே இந்த நிமிஷம் வரை இருந்து வருகிறது. வெளியே கிளப்பி விடுவதானால் ஓதுவார்தான் கிளப்பணும். இரண்டாயிரம் ரூபாய் சும்மாவா? இந்த ஜன்மம் முழுசும் சம்பாதிச்சாலும் பார்க்க முடியாதே!... ஆமாம், ஓதுவாரை ஏன் இரண்டு நாட்களாய்க் காணோம்? பணம் வாங்கிக் கொண்ட பிறகு இங்கே என்ன வேலை? அர்ச்சகர் வந்து கொண்டிருந்தார். கையை ஆட்டி, பெரிய குரலில் பேசிப் பிரசாதம் கொடுத்துக் கொண்டிருந்தார்.

தொலைவில் கோபுரம் தெரிகிறது. 'மன்னித்து விட்டேன்' என்று சொல்வது போல் பெருந் தன்மையோடு நிமிர்ந்து நிற்கும் கோபுரம். அல்லது 'பழி வாங்குவேன்' என்று பயமுறுத்துகிறதா? கோபுரத்திலிருந்து கண்களை அகற்றிச் சாலையைப் பார்த்தார் டிரஸ்டி.

தெருக் கோடியில் யாரோ கிழவர் ஓட்டமும் நடையுமாய் வந்து கொண்டிருந்தார். யாரது? இந்த வயதில் இவ்வளவு அவசரம்? நெருங்கி வரும்போது, ஓதுவாரின் தாமிர வர்ண தேகம் பளிச்சென்று தெரிகிறது. டிரஸ்டியை ஜன்னல் வழியாகப் பார்த்ததும் வலது கையைத் தூக்கிப் பெரிதாக ஆட்டினார் — ஏதோ கடவுள் அபய ஹஸ்தம் கொடுப்பது போல். டிரஸ்டி வியப்புடன் அவரையே பார்த்துக் கொண்டிருந்தார்.

இரைக்க இரைக்க உள்ளே வந்து நின்றார் ஓதுவார். அவர் நாசித்துவாரம் படபடத்தது. கண்களில் ஏதோ ஒரு தனி ஒளி. இன்னும் குளிக்கவில்லை போலிருக்கிறது. முதல் இரவு இட்ட திருநீறே பளிச்சென்று துலங்கியது.

''தாண்டவன் ரொம்பப் பெரியவன்தான். சந்தேகமில்லே!'' என்று சொல்லிக் குலுங்கக் குலுங்கச் சிரித்தார் ஓதுவார். உடலும் குரலும் இன்னும் நடுங்கிக் கொண்டிருந்தன.

மேல் கச்சத்தில் துணியைப் போட்டு ரொம்ப ஜாக்கிரதையாகச் சுற்றி வைத்திருந்த ஒரு பொருளைப் பிரித்தார். டிரஸ்டிக்கு நாக் குழறியது. ஏதோ சொல்ல வேண்டும் போல் தோன்றியது. கண் கரைந்தது.

ஓதுவார் கையில் பளிச்சென்று மின்னியது அந்த ரதத்தின் அந்தக் கலைத் துணுக்கு.

''தாண்டவன் ரொம்பப் பெரியவன்தான்'' என்று சொல்லிச் சொல்லிச் சிரித்தார் ஓதுவார். ''அவனுக்கு இது முழுசாய் இல்லாமல் ரதம் ஏறிப் போக மனசில்லையாம். எப்படியோ எங்கேயோ அனுப்பி என்னை வாங்கி வரச் சொல்லிட்டான்!'' என்று சொல்லி மறுபடியும் சிரித்தார்.

ஓதுவார் சிரிக்கச் சிரிக்க டிரஸ்டிக்கு அழுகையாய் வந்தது. ''தாண்டவன் பெரியவன்'' என்று சொல்லும்போது அழுகைதான் வந்தது.

''இப்பவே போய்ப் பொருத்தி வச்சுடறேன்'' என்று சொல்லிக் கிளம்பியவர், திரும்பி இடுப்புச் சுருக்குப் பையில் எதையோ அவசரமாய் எடுத்து வைத்தார். ''ஆயிரத்து எழுநூறு தான் ஆச்சு. பாக்கி முந்நூறு...'' என்று மூன்று பச்சைத் தாளைக் கட்டிலின்மேல் வைத்து விட்டுத் திரும்பி ஓடினார் ஓதுவார்.

டிரஸ்டியின் மனைவி ஒன்றுமே புரியாமல் விழித்துக் கொண்டு வாசலில் நின்றாள்.

# பாரிமுனை 'பாமிஸ்ட்' – ஸியார்

"ஸார், பாலிஷ் ஸார்! நல்லா போட்டுத் தரேன் ஸார்! ஷூ கண்ணாடி மாதிரி பளபளக்கும் ஸார்! நல்லா இல்லாட்டி துட்டு வாணாம் ஸார்!" என்று காலைப் பிடித்துக் கொண்டு கெஞ்சினான் அந்தச் சின்னப் பையன்.

ஞாயிற்றுக்கிழமையானதால் நாங்கள் ஓய்வாக உட்கார்ந்து ஏதோ அரட்டையடித்துக் கொண்டிருந்தோம். ஹாஸ்டல் அறைகள் ஞாயிற்றுக் கிழமைக் கோலம் பூண்டிருந்தன.

எங்கள் பேச்சு மும்முரத்தில் அந்தப் பையன் தொந்தரவு பிடிக்கவில்லை. இருந்தாலும் எனக்கு அவனை விரட்டியடிக்க மனம் வராததால் ஷூவைப் பாலிஷ் போடக் கொடுத்தேன். என் நண்பர்களும் அவனுக்கு வேலை கொடுத்தனர்.

நாங்கள் எங்கள் பேச்சைத் தொடர்ந்தோம். இடையிடையே பையனைக் கவனித்தபோது அவன் பாரபட்சமில்லாமல் ஒவ்வொருவர் ஷூவுக்கும் கை தேய, பொறுமையாகப் பாலிஷ் போட்டுக் கண்ணாடியாக்கிக் கொண்டிருந்தான்.

அரை மணி ஓடி விட்டது. அரை மணியில் ஒரு ரூபாய் சம்பாதித்துவிட்டான். சந்தோஷத்தோடு. "வரேன் ஸார்!" என்று விடைபெற்றுச் சென்றான்.




ஹாஸ்டலிலிருந்து அரை பர்லாங் நடந்தால் பாரிமுனை பஸ் ஸ்டாப். எனக்கு உறவினர் ஒருவரைப் பார்த்தாக வேண்டும். ஊரிலிருந்து வந்ததுபோல் அப்படி. ஆகவே இந்திரா நகருக்குக் கிளம்பிக் கொண்டிருந்தேன். மத்தியானச் சாப்பாடும் அங்கேதான். பஸ்ஸுக்காகப் பாரீஸ் கார்னரில் நின்றுகொண்டிருந்தேன். மனத்தில் பல குழப்பங்கள் எழுந்தன. எல்லாவற்றையும் வெளியில் சொல்லிவிட முடிகிறதா?

பாலிஷ்போட்டுக்கொடுத்த பையன் தன் கைபட்ட என் ஷூ காலில் கண்ணாடிபோல் மின்னுவதைக் கண்டான்.

"ஸார்! 'பாமிஸ்ட்ரி' பார்க்கிறீங்களா?" என்ற குரல் கேட்டுத் திரும்பினேன். முப்பத்தைந்து வயதிருக்கலாம். ஓர் ஆசாமி—சில புத்தகங்கள், பூதக்கண்ணாடி; கைரேகைப் பதிவுகளுடன் என் அருகில் நின்று கொண்டிருந்தான்.

எனக்குப் பிடிக்காத வேலை அது. நடுத் தெருவில் இந்த மாதிரி பொல்லாம் ரேகை பார்க்கவோ, குருவி ஜோசியம் பார்க்கவோ நான் போனதில்லை. அன்று என் மனநிலை அப்படி இருந்தது. கூட்டமும் அதிகம் இல்லை. நானும் சாதாரண வேஷ்டி சட்டையுடன் இருந்ததால், யாரோ வெளியூர் ஆசாமிமாதிரி எண்ணிக் கொண்டு அந்த நபரிடம் கையைக் காட்டினேன். ஐந்தே நிமிடங்களில் என்னை அயர்ந்து போகும்படி செய்து விட்டார்.

"புதன்மேட்டில் காணப்படும் ஸ்டாரிலிருந்து சொல்றேன் ஸார்! உங்களுக்கு விவாகப் பேச்சு ஆரம்பமாகி விட்டது. இரண்டு இடங்களிலிருந்து பெண் கொடுக்க வருகிறார்கள். உங்கள் வீட்டார் இரண்டு இடத்தையும் வெறுக்கிறார்கள். இதற்கிடையில் இந்த வருடத்துடன் படிப்பு முடியப் போகிறது. மேற்கொண்டு தொழிலில் ஈடுபடுவதா, இல்லை, பரம்பரைத் தொழிலில் இறங்குவதா... வக்கீலுக்குப் படிப்பதா - இவை போன்ற வேதனைகள் உங்களை வாட்டுகின்றன. இப்போது கூட ஒரு முக்கிய யோசனை கேட்கத்தான் போகிறீர்கள்....அடுத்த வருஷம் நிச்சயம் திருமணமாகிவிடும்... மேற்படிப்புக்குப் போவது சந்தேகம் தான். தொழிலில் ஈடுபடுவது நல்லது. ஏன்னா, லைன் ஆப் புரொபஷன் நல்லா 'டெவலப்' ஆகிட்டு வரது சார்!"

இப்படி அந்த ஆசாமி பேசி முடித்ததும் நான் பிரமித்துப் போனேன். எனக்கு நம்பிக்கை இல்லாத ஒரு சாஸ்திரத்தில் எனக்கு அசர நம்பிக்கை ஏற்படும்படி



கண் தெரியாதவர்களை அழைத்துச் செல்லும்போது அவர்கள் கையை நாம் பிடித்துக் கொள்ளக் கூடாது. நமது கையை அவர்கள் பிடித்துக் கொள்ளும்படி விடவேண்டும். அப்பொழுதுதான் நமது உடல் அசைவுகளை அவர்கள் உணர்ந்து கொண்டு அதற்குத் தகுந்தபடி நடப்பார்கள்.

டெக்கான் ஹெரால்ட் — 'பாபு'

---

ஒரு தடவை ஓவியர் பிக்காஸோவின் வீட்டில் திருடர்கள் புகுந்து பணத்தையும், நகைகளையும் எடுத்துக் கொண்டு போய் விட்டார்கள். பிக்காஸோவுக்கு ரொம்பக் கோபம். ஏன்? அவருடைய ஓவியங்கள் ஒன்றைக்கூட எடுத்துப் போகவில்லை அந்தத் திருடர்கள்!



பாஸ்டன் ஜூனியர் — 'பாலி'

---



தேனீக்களுக்கும் வியாதிகள் வரும் என்பதையும் மனிதர்களைப் போல், தேனீக்களையும் மருந்து கொடுத்துக் குணப்படுத்த முடியும் என்பதையும் நிரூபித்துள்ளனர் ருஷ்ய விஞ்ஞானிகள்! வியாதியால் பிடிக்கப்பட்ட தேனீக்களுக்கு வைக்கப்படும் உணவில், நேவோமைஸின் மருந்தைக் கலந்து கொடுத்து வியாதியைக் குணமாக்கியுள்ளனர். மருந்து சாப்பிட்டுக் குணமான பின் வழக்கமாகச் சேகரிப்பதை விட வருஷத்துக்கு 10 முதல் 15 கிலோ வரை அதிகத் தேன் சேகரிக்கின்றன தேனீக்கள்!

சோவியத் யூனியன் — ச. ஸ்ரீதரன்

---



"ஹா! டாக்டர்! தோட்டத்தில் பில் கம்பிக்கு நேற்றுத்தான் சாணை பிடித்தேன்!..."

---

அல்லவா பலன்களைச் சொல்லி விட்டார்! கேட்க வேண்டுமா உற்சாகத்துக்கு? நானும் சில கேள்விகளைக் கேட்டேன். அநேகமாகச் சரியான பதிலே கிடைத்தது.

போகும்போது இருந்த மனநிலை மாறி, புத்துணர்ச்சியுடன் காணப்படுவதைக் கண்டு நண்பர்கள் வியந்தனர். "என்ன விஷயம்? போன இடத்தில் ஏதாவது சந்தோஷ சமாசாரமா?" என்று ஆவலுடன் கேட்டான் பாஸ்கர்.

அவ்வளவுதான். "டேய்! இன்று காலை உங்களிடம் என் நிலையைச் சொல்லி வழி தெரியாமல் தத்தளித்தேன் பாருங்கள்! அதற்கெல்லாம் ஒரு முடிவு தெரிந்து விட்டது" என்று சொல்லிப் பாமிஸ்டின் அனுபவத்தை ஒன்று விடாமல் சொன்னேன்.

"எவ்வளவு கரெக்டாச் சொல்றான் தெரியுமா! அடடா! ஒவ்வொரு ரேகைக்கும் அர்த்தம் சொல்றான்டா! இங்கே வரச் சொல்லியிருக்கேன்... நீங்களும் பார்க்க வேண்டும்" என்று சந்தோஷம் தாங்காமல் பேசினேன். 'அவன் எப்போது வருவான்?' என்பதே என் கவலையாக இருந்தது.

ஞாயிற்றுக்கிழமை மாலையில் வழக்கமான ப்ரோகிராம் மாலையில் ஒரு சினிமாதான். நால்வரும் கிளம்பி விட்டோம். புதிய படம் ஒன்றைப் பார்ப்பது என்ற முழுத் துணிவுடன் தியேட்டரை நெருங்கி டிக்கட்டும் வாங்கி விட்டோம்.

படம் ஆரம்பிக்கச் சில நிமிடங்களே இருந்தன. வசதியாக உட்கார்ந்தபின் சுற்றிலும் கண்ணோட்டம் விட்டேன். எங்கள் வரிசைக்கு முன் வரிசையில் — அதோ அவனே தான் — சே, அவனேதான். என் கண்களை நம்பமுடியவில்லை. பாமிஸ்ட்! காலையில் பார்த்த முகவரியில் சந்திக்க பாமிஸ்ட் — எக்ஸலெண்ட் ரிப்போர்ட் கொடுத்திருக்கிற பாமிஸ்ட்! கூப்பிட்டு விடலாமா என்று ஒரு வேகம் தோன்றியது. சூழ்நிலையை நினைவுபடுத்திக்கொண்டு ஆவலை அடக்கிக்கொண்டேன்.

படம் ஆரம்பமாக மணி ஒலித்து விட்டது. தொடர்ந்து விளக்குகள் அணைந்தன. ஸ்லைடுகள் நகர ஆரம்பித்து விட்டன.

"...இந்தா அண்ணாச்சி! சிவபுரி புகையிலை கிடைக்கல்லே. தங்கம்பம்தான் வாங்கியாந்தேன்....அண்ணாச்சி பாக்கித் துட்டை நான் வச்சுக்கறேன் அண்ணாச்சி!" என்று புகையிலைப் பொட்டலத்தைக் கொடுத்துவிட்டுக் கெஞ்சும் சிறுவன் யார்? யார் அவன்? குரல் கேட்ட குரல் போலிருக்கிறதே!

"எதுக்குடா துட்டு உனக்கு?"—பாமிஸ்ட் மிரட்டிக் கேட்கும்போது, "பாலிஷ் சுத்தமா தீர்ந்துடுச்சு அண்ணாச்சி. ரவைகூட டின்னிலே இல்லே..." என்று இழுத்தான் சிறுவன். "தொலை தொலை" என்றவுடன் சில்லறை ஷர்ட் பாக்கெட்டில் போட்டுக் கொண்டு படம் பார்க்க உட்கார்ந்து விட்டான்.

புரிந்தது புரிந்தது! எங்கள் பேச்சுக்கு இடைஞ்சலின்றிக் காலையில் பொறுமையாகப் பாலிஷ் போட்ட அவனேதான்! பாலிஷ் ஷூவுக்கு மட்டுமா போட்டிருக்கிறான்? என் முகத்துக்கும் சேர்த்தல்லவா போட்டிருக்கிறான்? பாமிஸ்ட் ஏன் பாடம் ஒப்பிக்க மாட்டான்?

அந்தச் செய்தியை என்னால் நம்ப முடியவில்லை! ஆனால் தபால்காரர் சற்றுமுன்னால் கொடுத்த திருமண அழைப்பிதழைப் பிரித்துப் பார்த்த போது — அதிலும் — மணமகன் என்ற இடத்தில் நண்பர் மாயாண்டிநாதன் பெயரைக் கண்டபோது எனக்குப் பெரிதும் அதிர்ச்சியாகப் போய் விட்டது !

''நம்ப மாயாண்டிக்குத்தான் கல்யாணம்! இதோ அழைப்பிதழ்கூட வந்திருக்கு. பாரு!'' என்று நான் சொல்லவும், ''உண்மையாகவா?'' என்று கேட்டவாறு ஓடோடி வந்து அழைப்பிதழை வாங்கிப் பார்த்தாள் என் மனைவி.

''அவருக்குத்தான் திருமணம்! யார் வீட்டுச் சம்பந்தம், பார்த்தாயா? பெரிய இடம் ! நல்ல வசதி!'' என்றேன் நான்.

''ம் ! என்ன இருந்தாலும் உங்க நண்பர் சரியான அதிர்ஷ்டசாலிதான்! கொடுக்கிற தெய்வம் கூரையைப் பிய்த்துக் கொண்டு கொடுக்கும் என்கிறது சரியாய்ப் போச்சு! மனுசன் புடிச்சாலும் புடிச்சார்! புளியங் கொம்பாகப் பார்த்துப் புடிச்சார்! இவ்வளவு வருஷமாகப் பெண் கிடைக்காமல் திருமணம் ஆகாமல் இருந்தாலும் இருந்தார்! அதுவே அதிர்ஷ்டமாகி விட்டது. ஒரே மகள்! மாமனார் வீட்டு ஆஸ்தி முழுமைக்கும் நாளைக்கு இவர்தானே வாரிசு!'' என்று ஒரேயடியாகப் போற்றிப் புகழ்ந்து பெண் வீட்டாரின் பெருஞ் செல்வம் பற்றியும், நிலபுலன்கள் பற்றியும் அளக்கலானாள் என் மனைவி.

''எதற்கும் கொஞ்சம் யோகம் வேண்டியிருக்கு! நாயாகப் பிறந்தாலும் நல்ல நேரத்திலே பிறந்தாத்தானே நடிகை வீட்டுப் பட்டு மஞ்சத்திலே தூங்க முடியும்? என்னையும் பாரு ! அதிர்ஷ்டக்கட்டை!'' என்று இலேசாக ஒரு பேச்சை அவிழ்த்து விட்டேன் நான்.

''ஆமா! ஆமா! உங்க அதிர்ஷ்டத்துக்கு என்ன குறைச்சல்? ஏன் வீணாகச் சுற்றி வளைச்சுப் பேசுறீங்க! மாதா மாதம் முதல் தேதி அன்னைக்குக் கை நிறையச் சம்பளத்தை வாங்கி அப்படியே உங்க கையிலே கொண்டு வந்து கொடுக்கிறேனே! அது போதாதோ?'' என்று தனது நிலைக்கு வக்காலத்து வாங்க ஆரம்பித்து விட்டாள் அவள்.

''ம்! இப்ப நான் உன்னை என்ன சொல்லி விட்டேன்! பொதுவாகத் தானே சொல்றேன்! எதற்கும் யோகம் வேண்டியிருக்கிறது! 'தாரமும் குருவும் தன் வினைப் பயனே!' என்று பழமொழிகூட இருக்கிறதே!'' என்று சமாதானம் செய்தேன் நான்.

''ஆமா! ஆமா! கல்யாணம் ஆகி ஏழெட்டு வருஷங்கள் ஆகி இரண்டொரு குழந்தைகளைப் பெற்ற பின்பும், ஆசைக்கு ஒண்ணும் குறைச்சலில்லே! மாமனார் வீட்டிலே விருந்து மாதா மாதம் ஏதாவது கொடுத்துக் கிட்டு இருந்தாலும் நல்லதுன்னு தான் நினைக்கிறீங்க!'' - இழுத்தாள்.

''சரி! சரி! வேலைக்குப் புறப்படணும். மணி என்ன ஆச்சு? மணி பார்த்துச் சொல்!'' என்றேன் நான்.

''ஓகோ! நம்ம கல்யாண சமயத்திலே உங்களுக்குக் கைக் கடிகாரம் வாங்கிக் கொடுக்கலைங்கிறதை இப்படி மறைமுகமாச் சுட்டிக் காட்டுறீங்களாக்கும்! சுவர்க் கடிகாரத்திலே பார்த்தால் மணி என்னென்று தெரியாமலா போயிடும்!'' என்றாள் அவள்.

எண்ண அலைகள் பின்னோக்கிச் சென்றன!

நாச்சநல்லூர் கைலாச வித்தியாலயம் ஆரம்பப் பள்ளியில் சுமார் பத்தாண்டு காலத்துக்கும் மேலாகப் பணியாற்றுகிறவர்தான் நண்பர் மாயாண்டிநாதன். கள்ளங்கபடமில்லாத உள்ளம். பள்ளிக்கூடத்தில் பணியாற்றுகிற எல்லா ஆசிரியர்களுக்கும் அவர் ஓர் எடுபிடி ஆள்! தலைமை ஆசிரியர் முருகானந்தம் பிள்ளை வீட்டுச் சமாசாரம் முதல் காவல்காரர் ''கா''வன்னா வீட்டு விவகாரம் வரை யாவற்றிலும் தலையிட்டு உதவி செய்கிற பண்பாடு அவரோடு கூடப் பிறந்த ஒன்று. எனவே, கல்யாண வீடு முதல் கருமாதி வீடு வரை எல்லா விசேடங்களிலும் இவருடைய தலையைக் கண்டு கொள்ள முடியும். எங்கேயோ தென்காசிப் பக்கம் உள்ள இடைக்கால் என்பதுதான் அவர் பிறந்த ஊர். அவருக்கும் ஊருக்கும் உள்ள தொடர்பு அதோடு சரி. இளமையிலேயே தந்தையை இழந்த அவர், விதவையான தாயையும், உடன் பிறந்த சகோதர சகோதரிகளையும் பேணிப் பாதுகாத்து வந்த காரணத்தினால் முப்பது வயதைத் தாண்டியும், திருமணம் செய்து கொள்ளாமல் இருந்தார் என்று கேள்வி.

இதையே விவரம் தெரிந்த வேறு சில நெருங்கிய நண்பர்கள் சில சமயங்களில் மறுப்பதும் உண்டு.

''பழைய பேட்டைப் பள்ளிக்கூடத்தில் வேலை பார்க்கும் ஆசிரியை ஒருவர் மீது இவருக்குக் காதல். அதனால்தான் இவர் கல்யாணமே வேண்டாம் என்று இருக்கிறார்!'' என்பதுண்டு.

இவருக்குப் பின்பு இதே பள்ளிக்கூடத்தில் வேலைக்கு வந்து சேர்ந்த பல ஆசிரியர்கள்,



காதல் மூலமாகவோ அல்லது பெரியவர்கள் மூலமாகவோ காலா காலத்தில் கல்யாணம் செய்து கொண்டபோதெல்லாம், அந்தந்தக் கல்யாணங்களுக்குப் பள்ளி ஆசிரிய, ஆசிரியைகள் ஒன்றுபோல் திரண்டு சென்று வாழ்த்துவதும், அவ்வப்போது அவரைக் கோட்டா செய்து கிண்டல் பண்ணுவதும் நீண்ட கால வழக்கமாக இருந்து வந்தது.

இப்படியாகவே தமது இளமைப் பருவம் முழுவதையும் கழித்துவிட்ட இவருக்கும், அதுவும் பெரிய இடத்துச் சம்பந்தம் கிடைத்துவிட்ட ஆச்சரியச் செய்திதான் இன்று வந்து திருமண அழைப்பிதழாக அமைந்தது.

அழைப்பிதழில் அச்சிட்டிருந்த அந்தச் சுபயோக சுப தினத்தன்று நண்பர் மாயாண்டி நாதன் தமது திருக் கரங்களில் திருமாங்கல்யத்தைத் தூக்கித் திருமதி மாயாண்டியாக ஆகிக் கொண்டிருக்கும் மணப்பெண்ணின் கழுத்தில் கட்டினார். நாங்கள் வாழ்த்தினோம்!

ஊரே திரண்டு வந்திருந்தது. ஏகப்பட்ட கூட்டம். பெரிய இடத்துக் கல்யாணம் என்றால் கேட்க வேண்டுமா? பெண் கொடுத்தவர் அந்த வட்டாரத்திலேயே பெரும் புள்ளி என்பது கல்யாண வைபவத்தின் போது நன்றாகத் தெரிந்தது.

"பெண்ணைப் பெற்றவர்னு இப்படியல்லவா இருக்கணும்! ஒரே பெண்ணுன்னாலும் செய்றதுக்கு மனசு வேண்டாமா? என்ன ஏற்பாடு? என்ன சாப்பாடு?" — இது நண்பர் நாராயணனின் அபிப்பிராயம்.

"ம்"! சேர்த்து வைச்ச என்னத்தைக் காணப் போகிறோம்?" — இது பக்கத்து வீட்டு பம்பாய் அத்தானின் விமரிசனம்.

"உங்களுக்கு விஷயம் தெரியுமா? மாப்பிள்ளையை மாமனார் வீட்டோடுதான் வைத்துக் கொள்ளப் போகிறார்களாம்!" பெண்கள் பகுதியிலிருந்து இத்தகவலை ஒலிபரப்பிக் கொண்டிருந்தாள் டீச்சர் தாயம்மாள்.

"ம்! மாயாண்டி! சரியான யோகக்காரரய்யா! ஒரே பெண். நாளைக்கு மாமனாருக்கு வாரிசாக உள்ளதும் இவர்தானே!"— புகழ்ந்தவர் பூந்துறை தியாகராஜன்.

ஏன்? மாமனாருக்கு வேறு குழந்தைகளே கிடையாதா?

"இதுவரை இல்லீங்க! எல்லாம் இந்த ஒரே பொண்ணுதான். 'ஒண்ணே ஒண்ணு, கண்ணே கண்ணு!'ன்னு பொத்தி வளர்த்துப் பெரியவளாக்கிக் கல்யாணத்தையும் நடத்திட்டாங்க!"—இது கூடியிருந்த கிழடுகளிடையே எழுந்த பேச்சு.

"இவ்வளவு வசதியிருந்தும், ஒரே பெண் சீராட்டிப் பாராட்டி வளர்த்த ஒரே பெண்ணை, ஒண்ணுமே இல்லாத மாயாண்டிக்கு எப்படிப் பெண் கொடுத்தாங்க?"

இந்தப் புரியாத புதிர் ஆராய்ச்சியைத் தொடங்கி வைத்தார் நண்பர் சுப்பராஜ்.

"ஒரு வேளை பெண்ணுக்கு இலேசாக ஒரு காது..." — அந்தப் பேச்சுக்கு முழு உருவம் கொடுத்து மூக்கும் விழியும் வைத்தார் விளாத்திகுளத்திலிருந்து குடும்ப சகிதம் ஒரு வாரத்துக்கு முன்பே வந்து முகாமிட்டிருந்த நண்பர் நெல்லையப்பன்.

"சே! சே! அப்படியெல்லாம் ஒண்ணும் இருக்காது! ஏற்கனவே பெண்ணுக்கும் ரொம்ப வயசாயிடுத்து! இனியும் வைத்திருந்தா நல்லா இருக்காதேன்னுதான்....! சட்டுபுட்டுன்னு சீக்கிரமா இப்படியொரு மாப்பிள்ளையைப் பார்த்து நடத்திட்டாங்க!" என்றார் அருகிலிருந்த பெரியவர் ஒருவர்.



மொத்தத்தில் சம்பந்தம் செய்து கொண்ட பெண் வீடு மாப்பிள்ளை வீட்டுக்காரர்கள் ஒன்றும் பேசிக் கொள்ளாத இந்த விஷயத்தில் கல்யாணத்துக்கு வந்திருந்த எங்களைப் போன்றவர்கள்தான் மிகுந்த அக்கறை செலுத்தினோம்.

"என்னங்க? இதைப் பற்றி நீங்க என்ன நினைக்கிறீங்க?" என்று கேட்டாள் என் மனைவி.

"பெண் வீட்டுக்காரர்கள் எந்தச் சந்தர்ப்பத்திலே எதற்காக, எதைச் செய்கிறார்கள் என்பதை முன்கூட்டியே எட்டி யோசித்துக் கண்டு பிடிக்கக்கூடிய பழக்கம் எப்பவுமே கிடையாதே!" என்றேன் நான்.

"உங்களிடம் வந்து கேட்டேன், பாருங்க!" என்று கூறிவிட்டு என் பேச்சின் உள் அர்த்தத்தைப் புரிந்து கொண்டாள் அவள்.

கல்யாணம் நடந்து இரண்டு மாத காலம் ஆகிவிட்டது. நாங்களும் ஊரை விட்டு மாற்றிச் சென்னைக்கு வந்து குடியேறி விட்டோம்!

ஒரு நாள் மாலை, மெரினா கடற்கரைக்குச் சென்ற போது நண்பர்

மாயாண்டியின் மாமனார் தம்பதிகளைக் கடற்கரையில் கண்டுகொண்டோம்.

"பார்த்தீர்களா? புதிதாகக் கல்யாணம் செய்து கொண்ட மகளும் மருமகனும் கொஞ்ச காலத்துக்கு வீட்டிலே தனியாக இருக்கட்டும் என்று நினைத்துக் கொண்டு இப்படிக் கிளம்பி வந்திருக்கிறார்கள் போலிருக்கிறது!" என்றாள் என் மனைவி.

"என்ன சௌக்கியமா? ஊரிலிருந்து எப்போ வந்தீர்கள்? புதுமணத் தம்பதிகள் எப்படி இருக்கிறார்கள்?" என்று பேச்சைத் தொடங்கினேன் நான்.

"இப்போதுதான் வருகிறோம்! இவ்வளவு காலமாக ஒரே பெண்ணைப் பெற்று வளர்த்துப் பெரியவளாக்கிக் கல்யாணம் பண்ணிக் கொடுக்கிற வரையிலே வியாபார விஷயமாக அப்பப்போ நான் மட்டும் சென்னைக்கு வந்திட்டு உடனே திரும்பி விடுவேன்.

"வயது வந்த பெண்ணைக் கல்யாணத்துக்கு முன்னே வெளியே அழைத்துப் போறதும் நம்ம பக்கத்து வழக்கமில்லே, பாருங்க! அதனாலே வீடே கதி என்றிருந்த இவள் இதுவரையில் இங்கேயெல்லாம் வந்து பார்க்க இயலாமல் போய் விட்டது. இனியாவது நாலு இடங்களைச் சுற்றிப் பார்த்துவிட்டு வருவோமென்று நினைக்க இவளையும் கூடவே அழைச்சிட்டு வந்தேன்" என்று விவரம் கூறினார் மாயாண்டி நாதனின் மாமனார்.

"அதுவும் சரிதான்! எத்தனை நாட்களுக்குத்தான் வீட்டிலேயே கட்டிப் போட்ட மாதிரி இருக்க முடியும்?" என்று ஆமோதித்தேன் நான்.

"வீட்டுக்கு வந்து விட்டுப் போங்களேன்! சைதாப்பேட்டையில்தான் குடியிருக்கிறோம்!" என்று பேச்சுக்காக அழைத்தாள் என் மனைவி.

"இல்லையம்மா! ஆறரை மணிக் காட்சிக்கு டிக்கெட் ரிசர்வ் செய்து விட்டோம்! போக வேண்டும்! நம்ப ஊரிலே சினிமாவுக்குப் போவதற்கெல்லாம் நேரம் எங்கே இருக்கிறது? இந்த மாதிரி எங்கேயாவது வெளியூர் போன போது பார்த்தால்தானே உண்டு!" என்று பதில் கூறினார்கள் அவர்கள்.

அதற்குப் பின்பு ஓராண்டு காலம் கழிந்து விட்டது. இன்றுவரையில் நண்பர் மாயாண்டியிடமிருந்து கடிதமோ தகவலோ ஒன்றுமில்லை!

ஆனால் இப்போது தந்தி வந்திருக்கிறது! "யாரிடமிருந்து?" என்பதுதான் என் மனைவியின் கேள்வி.

"எல்லாம் நண்பர் மாயாண்டியிடமிருந்துதான்! ஆண் குழந்தை பிறந்திருக்குதாம்!" என்பது என் பதில்.

"ம்! நல்லா இருக்கட்டும். தனக்குத்தான் வாரிசாக ஓர் ஆண் குழந்தைகூட இல்லையென்று வருத்தப்பட்டுக் கொண்டிருந்த பெரியவருக்கு இப்படி ஒரு பேரக் குழந்தை. அதுவும் ஆண் குழந்தை. அதிலும் திருமணம் நடந்த ஒரு வருடத்துக்குள்ளேயே மகளுக்குப் பிறந்திருக்கிறதென்றால், அது சரியான யோகம்தான்! 'புதுமணத் தம்பதிகள் கொஞ்ச காலத்துக்குத் தனியே சுகமாக இருக்கட்டும்' என்று எண்ணிப் பெருந்தன்மையோடு அவர்களைத் தமது பங்களாவில் விட்டு விட்டு இவர்கள் சற்று ஒதுங்கியிருப்பதற்காகவே வெளியூர்ப் பயணம் புறப்பட்டுச் சென்னைக்கு வந்திருந்தார்களே! அப்போதே நான் நினைத்தேன். என் யூகம் சரியாகப் போய் விட்டது!"

என் மனைவியை நான் மேலும் பேசவிடவில்லை. "ஆமாம்! ஆமாம்! நீயும் உன் யூகமும்! இப்போது ஆண் குழந்தை பிறந்திருப்பது நீ நினைப்பது போல் நண்பர் மாயாண்டிநாதனுக்கு அல்ல! அவருடைய அருமை மாமனாருக்குத்தான். மகளைக் கட்டிக் கொடுத்துவிட்டுக் காசி, இராமேசுவரம்னு ஜோடியாகத் தீர்த்த யாத்திரை சென்று வந்தாங்களே! அது கை மேல் பலன் கொடுத்திருக்கு!" என்று கூறித் தந்தியைப் படித்துக் காட்டினேன் நான்.



காதலி: என்னைக் கைவிட மாட்டீர்களே?

காதலன்: இரண்டு நிமிஷமாவது கைவிட்டாகணும். சிகரெட் பிடிக்க வேண்டாமா நான்?



"நேற்று அடுத்த வீட்டு அம்புஜம் தன் தலையின் பின்னே பந்தை வைக்கக் கொண்டை போட்டுக் கொண்டு டென்னிஸ்பந்து என்கிட்டே பிரமாதமாகப் பேசினாள். அதுனாலே அவள் மூக்கை உடைக்க இன்னிக்கு நான் 'புட்பால்' வைக்கக் கொண்டை போட்டுக் கொண்டு விட்டேன்!"

# ஓட்டலில் வீட்டுச் சாப்பாடு!



பெண்களொன்று பரிமாறினால் வீட்டுச் சூழ்நிலை தானாக உண்டாகி விடாதா!



சாதம் இன்னும் வேணுமா? பக்கத்து ஓட்டலுக்குப் போய் கடன் வாங்கிவரச் சொல்லுகிறேன்!




குழந்தைகளுடன் பகிர்ந்துண்ணலும் 'இன்பமும்' கிட்டுகிறது!



தண்ணீரைக் கொட்டி வயிற்றை நிரப்பும் ஓட்டலில், தண்ணீரைக் கண்ணில் படாமல் செய்து ஏற்படும் ஏக்கம் நிச்சயம் வீட்டுச் சூழ்நிலையை உண்டாக்கும்!



தொட்டுத் தொட்டாக வழியும் குழாயடியில் கை கழுவாமல் தாம்பாளத்தில் கை கழுவும் இன்பத்தை அனுபவிக்கலாம்!

ஓட்டலில் வீட்டுச் சாப்பாட்டை அனுபவித்தவர் வீட்டில் ஓட்டல் சாப்பாட்டுக்கு ஏங்கலாம்!






★லாட்டரிச் சீட்டுப் பிரசாரத்தில் தன்னையே இழந்துவிட்ட அரசாங்கம் பழைய நீதிகளையும், நெறிமுறைகளையும் புறக்கணிக்க முற்பட்டுவிட்டது என்பதற்கு ஓர் எடுத்துக்காட்டு. வானொலி விவித பாரதி விளம்பரங்களில் தமிழ் நாட்டுப் பரிசுச் சீட்டுக்கும் விளம்பரம் செய்கிறார்கள். அதில் 'சிந்தனை பிறகு, செயல் முதலில்' என்றொரு வாக்கியம் வருகிறது.

'' எண்ணித் துணிக கருமம் துணிந்தபின்
எண்ணுவம் என்பது இழுக்கு ''

என்ற வள்ளுவப் பெருந்தகையின் வாக்கைப் பஸ்களில் எழுதிவிட்டு நடைமுறையில் காற்றில் பறக்க விடலாமா? 'படிப்பது இராமாயணம்; இடிப்பது பெருமாள் கோவில்' என்ற முறையில் சூதாட்ட வழிக்காக அரசாங்கம் பிரசாரம் செய்யுமேயானால் வருங்கால சந்ததியினரின் ஒழுக்கம் பாதிக்கப்படுமே!

சென்னை-17
20-12-69 எஸ். ராமநாதன்

பொதுமக்கள் மனு எழுதுவதற்குப் பயன்படுத்தப்படும் கோர்ட் பீ ஸ்டாம்புகளை அதன் மதிப்புத் தொகையை விட அதிக விலைக்கு விற்கிறார்கள். அதாவது ஒரு ரூபாய் மதிப்புள்ள ஸ்டாம்பை ரூ. 1-50, 2-00 வரை விற்கிறார்கள்.

ஒருசிலர் மொத்தமாய் வாங்கி வைத்துக் கொண்டு அதிக விலைக்கு விற்று லாபம் சம்பாதிக்கிறார்கள். இதனால் ஏழை மக்கள் சில சமயம் படும் அவதி கொஞ்ச நஞ்சமல்ல. தட்டுப்பாடு ஏற்படும் ஒவ்வொரு பொருளையும் அதிக விலைக்கு விற்கும் நோக்கத்தில், பதுக்கல் வேலையில் ஈடுபடும் சமூக விரோதிகள் இருக்கவே செய்கிறார்கள். கோர்ட் பீ ஸ்டாம்புகளுக்குத் தட்டுப்பாடு ஏற்படாமல் அரசினர் கண்காணித்துக் கொள்ள வேண்டும்.

கடையாலுருட்டி (நெல்லை)
20-12-69 எஸ். ஆர். சின்னமணி

டிசம்பர் 21ந்தேதி கல்கி இதழில் சீக்கியத் தலைவர் இரு தர்சின்சிங் பெருமான்தான் உலகிலேயே அதிக நாட்கள் உண்ணாவிரதமிருந்து இறந்தவர் என்று ஒரு துணுக்கில் குறிப்பிடப்பட்டுள்ளது. இது தவறு. அந்தப் பெருமையைத் தட்டிக் கொண்டவர் ஒரு தமிழரே என்பதில் நாம் 'பெருமை' கொள்ள வேண்டும். காங்கிரஸ் ஆட்சியின் போது சென்னை மாநிலத்தின் பெயரைத் 'தமிழ்நாடு' என்று மாற்றக் கோரி உண்ணாவிரதமிருந்து உயிர் நீத்த விருதுநகர் வீரர் சங்கரலிங்க நாடாரை மறக்கலாமா?

காரைக்கேணி
26-12-69 சி. இராசு

★ இக் குறிப்பிட்ட கடிதம் ரூ. 15 பரிசு பெறுகிறது.

பார்க்பேர் பொருட்காட்சியிலும், காங்கிரஸ் பொருட்காட்சியிலும் பலவித சூதாட்டங்கள் நடக்கின்றன. ஆறு காய்களைப் பொறுக்கி அதிலுள்ள எண்களைக் கூட்டி முப்பத்தைந்து வந்தால் பிலிப்ஸ் ரேடியோ, முப்பத்திநான்கு வர்தால் டிரான்ஸிஸ்டர் ரேடியோ, முப்பத்திமூன்று வந்தால் மின்சார விசிறி என்றெல்லாம் விளம்பரம் பண்ணி ஜனங்களுடைய ஆசையைத் தூண்டி விடுகிறார்கள். இவையெல்லாம் சூதாட்டம் மட்டுமில்லை, மோசடியும்கூட. இது விஷயத்தில் ஜனங்கள் எச்சரிக்கையாக இருக்க வேண்டும்.

சென்னை — 26 வி. எஸ். கிருஷ்ணமூர்த்தி

டிசம்பர் 21ந் தேதி இதழில் வெளியிட்டிருந்த கிரிக்கெட் க்விஸ் பகுதியின் முதல் கேள்விக்கு விடை தவறானது. ஓர் இன்னிங்ஸின் ஆரம்பத்தில் விளையாட வந்து, இன்னிங்ஸ் முடிந்த பின்னும் அவுட் ஆகாமல் இருந்தவர்கள் பலர். பில் லாரி, பில் பிரௌன், லென் ஹட்டன் இவர்களைத் தவிர வேறு சிலரும் இந்தச் சாதனையை டெஸ்ட் பந்தயங்களில் புரிந்துள்ளனர்.

இந்தியாவின் விஜய் மர்செண்ட், ஒரே மாட்சில் இரு இன்னிங்ஸிலும் மேற்கூறிய சாதனையைப் புரிந்தவர். ஆனால் அது டெஸ்ட் பந்தயத்தில் அல்ல; லங்காஷயருடன் நடந்த கவுண்டி பந்தயத்தில்.

ஹைதராபாத்
22-12-69 வி. ரகுநாதன்

அஞ்சல் அலுவலகத்தில் சேமிப்பு நிதியை ஆரம்பிப்பதில் ஒரு கஷ்டம் இருக்கிறது. நாம் பணம் போடும் ஒவ்வொரு சமயமும் அவர்கள், நம் கணக்கில் பணம் சேர்ந்ததற்காக ஒரு கடிதம் அனுப்புகிறார்கள். யாருக்கும் தெரியாமல் பணம் சேமிப்பவர்களுக்கு இது பெரும் தொல்லையாக இருக்கிறது. உதாரணமாக என் கணக்கில் எவ்வளவு பணம் இருக்கிறது என்று நான் சொல்லாமலேயே என் பெயருக்கு வரும் கடிதத்திலிருந்து, எனக்கு வேண்டியவர்கள் தெரிந்துகொண்டு தங்களுக்குக் கடன் கொடுக்கும்படி என்னைத் தூண்டுகிறார்கள். இதனால்தான் பலர் தங்கள் சேமிப்பு நிதிக் கணக்கை பாங்கியில் ஆரம்பிக்கிறார்கள். அங்கு இதுபோன்ற தொந்தரவு இல்லை. வாடிக்கையாளருக்குக் கஷ்டத்தை உண்டாக்கும் இந்த முறையை நிறுத்தினால் என்ன?

சென்னை-6
27-10-69 டி. பி. ராஜு



சேலம் ஆடிட்டர் என். எஸ். சுகவனத்தின் குமாரத்தி சௌபாக்யவதி பிரேமாவுக்கும், கபிஸ்தலம் சிரஞ்சீவி டாக்டர் S. R. சுப்பிரமணியம் M. B. B. S.க்கும் சேலத்தில் திருமணம் வெகு சிறப்பாக நடந்தேறியது.

வாழ்க மணமக்கள்!

**போக்குவரத்தில் உண்மையான**
**லாபம் சம்பாதிக்க**
**"லாபம் தரும் வண்டி" தேவை**

# 7½ டன்

120 H. P. டீஸல் என்ஜின்

# பார்கோ ராக்கெட்





**பிரிமியர் ஆட்டோமோபைல் தயாரிப்பு**
**அத்துடன் டிவிஎஸ்**
**ஸ்தாபனத்தின் சிறந்த பணி**

முந்தியும் புதிதாக அமைக்கப்பெற்றது - முன்னர் இருந்ததைக் காட்டிலும் [illegible] வலுவுள்ளது பார்கோ ராக்கெட். இது உண்மையிலேயே நடைமுறைச் செலவை குறைக்கிறது. நடைமுறைச் செலவைப் பொறுத்தது லாபம் அல்லது நஷ்டம்.

பார்கோ ராக்கெட் 7½ டன் சுமையை 120 H.P. பலத்துடன் லாவகமாக இழுத்துச் செல்கிறது. எவ்வளவு தூரம் வேண்டுமானாலும், எத்தனை முறை வேண்டுமானாலும் சிணுக்காமல் இழுத்துச் செல்லும்.

எனவே பார்கோ ராக்கெட் உண்மையிலேயே 'லாபம் தரும் வண்டி' என்பதைக் காண்பீர்கள் •

120 BHP 6354 [illegible] என்ஜின் • அபிவிருத்தி செய்யப்பெற்ற ஹெவி டியூட்டி புல் புளோட்டிங் ஹைபாய்ட் டிரைவ் ரியர் ஆக்ஸில் • முன்னிலும் திறமையுள்ள ஹெவி டியூட்டி உறுதியுள்ள சஸ்பென்ஷன் • அபிவிருத்திசெய்யப்பெற்ற தொந்தரவு இல்லாத 5 ஸ்பீட் கியர் பாக்ஸ் • பணிசெய்வதற்கு என்ஜினை சுலபமாக அணுகும் வசதி • சௌகரியமாக ஓட்டுவதற்கு [illegible] கண்ட்ரோல்.

அதிகமான சுமையை ஏற்றிச் செல்ல G.V.W. 25,000 பவுண்டு [illegible] கிடைக்கும்.

ஒவ்வொரு பார்கோ ராக்கெட்டுக்கும் டிவிஎஸ்ஸின் சிறந்த பணி உண்டு.

சுலபமான தவணைகளில் பணம் செலுத்துதல், இன்சூரன்ஸ், பாடி கட்டுதல், நியாய விலையில் ஸ்பேர் உதிரிபாகங்கள், டயர்களை ரீட்ரேடிங் செய்தல், தேய்ந்து போன சாமான்களைப் புதுப்பித்தல், விரைவான நம்பகமுள்ள சர்வீஸ், அனைத்தையும் டிவிஎஸ்—உங்களுக்கு ஒருசேர அளிக்கிறது.

சுந்தரம் பைனான்ஸ்
சுந்தரம் பைனான்ஸ் 40,000 ரூபாய்வரை ஹையர்பர்சேஸ் ஏற்பாடு செய்யும். அதனை சுலபமான மாதத் தவணைகளில் திருப்பிச் செலுத்தலாம்.

உங்கள் நம்பிக்கைக்கு உரியது
டி.வி.எஸ்.



டி.வி. சுந்தரம் ஐயங்கார் & சன்ஸ் பிரைவேட் லிமிடெட்
மதுரை · திருச்சி · திருநெல்வேலி · புதுக்கோட்டை · சேலம் · கோயமுத்தூர் · திருவனந்தபுரம் · எர்ணாகுளம்

சுந்தரம் மோட்டார்ஸ் பிரைவேட் லிமிடெட்
மதராஸ் · பெங்களூர் · செகந்திராபாத் · விசாகபட்டணம்

TVS-6316

Printed & published by R. Ananthanarayanan on behalf of Messrs. Bharathan Publications Private Limited at Kalki Press, Chetput, Madras-31
Managing Editor: T. Sadasivam

இப்போது
புதிய
தோற்றத்தில்!




**ஸ்வஸ்திக்
பெர்ஃப்யூம்டு
கேஸ்டர் ஆயில்**

பரட்டையான படியாத
கேசத்தையும் படியவைக்கும்
நாள் முழுதும் கேசத்தை
எடுப்பாக எழிலோங்கச்
செய்யும்.

பட்டுப்போன்ற படியும் கேசம்...
ஒளிசிந்தும் எழிலோங்கும் கேசம்...
ஆரோக்கிய நறுமணம் வீசும் கேசம்...
நாள் முழுதும் எடுப்பாக விளங்கச்
செய்கிறது ஸ்வஸ்திக் பெர்ஃப்யூம்டு
கேஸ்டர் ஆயில்.

**ஸ்வஸ்திக் ஆயில்
மில்ஸ், பம்பாய்.**

Shilpi SOM 17/69 TAM

